உ



கடவுள் துணை.

# பெரியபுராணம்.

அறுபத்துமூன்றுநாயன்மார்சரித்திரம்

இஃது

பெங்களூர்

ஆ-வே-ஆறுமுகமுதலியார்

அனுமதியின்படி

சதுர்வேதசித்தாந்தசபையாரும், சைவசித்தாந்த

சபையாரும், வேண்டிக்கொண்டபடிக்கும்

மதுரை - புதுவை-சென்னை - இச்சங்கங்களில்

தமிழ்த்தலைமைப் புலமை நடாத்திய

களத்தூர்

## வேதகிரிமுதலியார்

அவர்களால்.

மேற்படி புராணம் வாக்கியமாக்கப்பட்டு,

அறுபத்துமூன்றுநாயன்மார் படங்களுடன்

இவர்குமாரர்

கந்தசாமிமுதலியாரது

இலக்கணக்களஞ்சிய

அச்சுக்கூடத்தில் பதிப்பித்தது.

பிரமாதிஞூ-ஆடிமீ.

1879

உ

சிவமயம்.

# விளம்பரம்.

இப்புத்தகம் வேண்டியவர்கள் சென்னப்பட்டணம் சூளை அவதானம் பாப்பையா தெரு வடவண்டைவாடை (௭௬) வது கிரகத்தில் ஸ்தாபித்திருக்கும் இலக்கணக்களஞ்சிய அச்சுக்கூடத்துத்தலைவர் வேதகிரிமுதலியார்குமாரன் ஆயுள்வேதபாஸ்கரன் கந்தசாமிமுதலியாரிடத்திற்பெற்றுக்கொள்ளலாம் விலை ரூபா - க.

| | |
|---|---|
| யாக்கோபு-ரூபா | 𑿑 |
| வயித்திய அகராதி-ரூபா | ௨ |
| நளவிமபாகசாத்திரம்-ரூபா. | க |
| காரணமாலை இதன்விலைரூபா | க |

ராவிரவும் பகலும் இடைவிடாமற் காக்கப்பட்ட வெள்ளிமலையென்றுங்கைலாயத்தின் அடிவாரத்தில் எச்சமயங்களினும் சைவசமயமே மெய்ச்சமயமென்றும் எக்கடவுளினும் பரமசிவமே மெய்க்கடவுளென்றும் நிச்சயித்தறிந்தவராகிய உபமன்னிய மஹாமுனிவர் இவர் கிருஷ்ணனுடைய தலையில் தன் திருவடியைச் சூட்டினவர் பிறப்பிறப்பில்லாதவர் பரமசிவன் அருளால் திருப்பாற்கடலையுண்டவர் கடவுளினிடத்து இடைவிடாத மிகுந்த அன்புள்ளவர்.

இந்த உபமன்னிய மஹாமுனிவர் ஒருநாள் அடியார்களும் முனிவர்களும் பெரியோர்களும் தன்னைச்சூழ்ந்திருக்குஞ் சமயத்தில் தங்கெதிராக ஆயிரம் ஆதித்தகிரணங்கள் ஏககாலத்தில் ஒன்றாகத்திரண்டு பிரகாசிப்பதுபோல ஓரொளிதோன்ற அதைக்கண்டு தன்னைச்சூழ்ந்திருந்த எல்லோரும் உபமன்னிய மஹாமுனிவனைநோக்கி இதுவென்ன ஆச்சரியம் இப்படிப்பட்ட ஒளிதோன்றுவதற்குக்காரணமென்னவென உபமன்னியர் சிவனைத்தியானித்துத்தெரிந்து தென்றிசையில் திருநாவலூரிலவதரித்த சுந்தரமூர்த்தியென்றும் வன்றொண்டரென்றுந்திருநாமம்பெற்றவர் சிவனது ஆஞ்ஞையால் வருகிறாரென்று தனதிருகரமுஞ்சிரமேற்குவித்து அத்திசையைநோக்கி வணங்கி ஆனந்தக்கண்ணீருடன் முழுதுமனைப்புச் செல்லும்போது மற்றவர்கள் தங்களுக்குண்டாகிய சந்தேகநிவர்த்தியாகும்பொருட்டு எங்களாண்டவராகிய முனிவரே சிவனது திருவடிகளையல்லாமல் வேறொருதெய்வத்தினடிகளையும் மனதினாலுஞ் சிந்தியாததேவரீர்-இன்றுவணங்குதற்குக் காரணமென்னென உபமன்னியர் கேளுங்கள் பெரியோர்களே பரமசிவன்றரிக்கப்பட்ட திருமாலையையும் திருவெண்ணீற்றினையும் எடுத்துவருகின்றவர் அவருடையபெயர் ஆலாலசுந்தரர் முற்காலத்திலொருநாள் பரமசிவனுக்குத்தக்க மலர்களெடுக்க நந்தனவனத்திற்குச் சென்றார்-அவர் செல்லுமுன்னமே பார்வதிதேவியாருக்கு மலர்கள்பறித்துவர தோழிமார்களாகிய அநிந்திதையென்றும் கமலினியென்றும் இருபெண்கள் வந்துமலர்கள்கொய்துகொண்டிருக்கும்போது தான்வந்தது தற்பவிக்க மிகுந்ததவஞ்செய்த தென்றிசையானது வாழவுங்குற்றமற்ற திருத்தொண்டத்தொகை சொல்லவும்வருகின்றவராகிய ஆலாலசுந்தரர் இதுகடவுளின்றருளென்றுகருதி அவ்விருவரையுங் கண்டிச்சைகொண்டார் அப்பெண்களிருவரும் அவ்வாலால சுந்தரரைக்கண்டிச்சித்தார்கள்பின்பு ஆலாலசுந்தரரும் பரமசிவனுக்குத்தக்க மலர்களையெடுத்துக்கொண்டுபோனார் அப்பெண்களும் பார்வதியாருக்குத்தக்கமலர்களை யெடுத்துக்கொண்டுபோனார்கள் இவையெல்லாமறிந்தபரமசிவனார் ஆலால

சுந்தரரைப்பார்த்து நீபெண்களிடத்திச்சைவைத்தபடியால் தென்தேயத்திற்போய்ச் சரீரமெடுத்து அந்தப்பெண்களோடும் ஆசைதீரும்படி கலந்தனுபவிக்கக்கடவாயென்று கட்டளையிட ஆலாலசுந்தரர்இருகரங்களுங்குவித்து மங்கலங்கி என்னுடைய வபாக்கியத்தால்தேவர் திருவடிகளைவிட்டு நீங்கும் அடியேன்விதிவிலக்குகளையறியாதவன் ஆகையால் எளியேனைத்தடுத்தாட்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்ள சுவாமியப்படியே தடுத்தாட்கொள்வோமென்று கட்டளையிட்டருளியபின்பு ஆலாலசுந்தரரும் அநிந்திதையும் கமலினியுந்தென்றிசையிலவதாரஞ்செய்து இன்பத்தையநுபவித்தார்கள் அவர்களில் ஆலாலசுந்தரர் வருகிறதொன்று அவருடைய செய்திகளையெல்லாம் வரன்முறையாக உபமன்னிய மஹாமுனிவர் மற்றமுனிவர்களுக்குச்சொல்ல அதைக்கேட்ட அம்முனிவர்கள் பாசபந்தங்களில் அகப்பட்டுத்தடுமாறுகின்ற மானுடர்பிறப்பதற்கிடமான தென்றிசையானது மற்றத்திசைகளைப்பார்க்கிலுஞ் சிறந்ததற்கு அதுசெய்தபுண்ணியம் யாதென உபமன்னிய மஹாமுனிவர் என்பிதாவாகிய வியாக்கிரமபாதரால் பூசித்த சிதம்பரமும் பூமிதேவிக்கிருதயமாகிய திருவாரூரும் கம்பாநதிசூழ்ந்த காஞ்சிபுரமும் சிவனெழுந்தருளிய திருவையாறும் பிரளயகாலத்துமூழ்காத தோணிபுரமும் மற்றும்பலதிவ்வியஸ்தலங்களும் தென்றிசையினிடத்திருக்கின்றன இவ்விதமான தலங்களின் பெருமையும்இத்தலங்களிலேசிவபணிவிடைகள்செய்து பேறுபெற்ற சிவனடியார்கள்பெருமையுந் திருவாய்மலர்ந்தருளினார் இந்தப்பிரகாரம் சுந்தரமூர்த்திசுவாமிகளால் திருவுளமகிழ்ந்தருளிய திருத்தொண்டத்தொகைப்படிசேக்கிழாரருளிச்செய்த புராணத்தை வாக்கியமாகச் சொல்லுகிறோம்.

## மநுச்சக்கிரவர்த்திசரித்திரம்.

எவற்றிற்குமுதல்வனுகிய பெரியதவத்தையுடைய அகத்தியமுனிவனது கமண்டலத்தி னின்றும்வெளிப்பட்ட பூமிதேவியின் மார்பிற்றங்கிய முத்துமாலையையொத்த காவிரியாற்றாற் சூழப்பெற்ற பலவளங்களு நிறைந்துள்ள சோழநாட்டின்மத்தியில் மிகுந்தபழமையானதும் இலக்குமியாற் பூசிக்கப்பெற்ற வன்னியும், கங்கையும், மதியுந்தங்கிய சிவந்த சடையினையுடைய பரமசிவன் வசிக்கின்ற திருவாரூரென்னு நகரமொன்றுண்டு அந்நகரத்தில் அநபாயச்சோழவம்சத்திற்பிறந்தமநுச்சக்கிரவர்த்தி, மநுமுறைவழாது, செங்கோல்செலுத்தி அரசையாமணிமுடி சூடியொருகுடைநீழலாக்கி அரசாளுங்காலத்தில் பரமசி

வனது திருவருளால் தம்முடையமனைவியார் திருவயிற்றில்சிக்கக்குட்டிக்கொப்பாகிய வீதிவிடங்கனென்னும் ஒருபிள்ளைபிறந்தது அநேக தவங்களைச்செய்து அருமையாகப்பெற்ற ஒப்பற்ற அப்பிள்ளையானதுநாள்தோறும் பரமசிவத்தைப் பூசை செய்யுமுயற்சியிலிருந்து அவரருளினால் வடமொழிமுதலிய பலபாஷைகளுந் திருத்தமாகவோதி யானையேற்றங் குதிரையேற்றந் சதுர்வேதமுதலிய எல்லாவற்றையுங்கற்றுவல்லவனுகித்தன்னையருமையாகப்பெற்ற தந்தைமனமகிழ்ந்து அன்புகூரும்படிமேலான நற்குணங்களாநிறையப்பெற்று இளவரசாகிவாழுகின்றநாளில் ஒருநாள் வெண்கொற்றக்குடையினையுடைய அரசனதுஅழகுமிகுந்த அரண்மனையினின்றும் ஆகாயத்தையளாவிய மாடமாளிகைகள் நெருங்கியவீதியில் அநேக அரசர் குமாரர்கள் தன்னைச்சூழ வாசனைதங்கிய மலர்மாலைகள் தொங்காநின்று குங்குமமணிந்த தோள்களையுடைய இராஜபுத்திரன் மிகுந்தசேனைகள் தன்னைச்சூழ இரதத்தின்மீதேறி முன்னர் வந்தியருள், சூதரும்,மாகதருந்,தன் வீரமுதலியவற்றைப்புகழ்ந்துசெல்ல ஒருபக்கத்தில் முரசுவாத்தியங்களும்,ஒருபக்கத்தில் சங்கவாத்தியங்களு முழங்கச்செல்லும்போதுஒப்பற்றபெரியதருமதேவதையானது தயையில்லாமல் நாலுவகைச்சேனைகளையுடைய சோழமஹாராஜனது அச்சமற்ற மநுநீதியுண்மையைச் சோதிக்கவந்ததுபோல அங்குசெல்லுமனிதர்கள் தவதுவரவைக்காணாதவண்ணம்ஓரழகியபசுவின் புதிய இளங்கன்றானது துள்ளிக்கொண்டுஅவ்வீதியின்வந்துஅரசகுமாரன்தேர்க்காலிலகப்பட்டு இறந்தது.

அதைக்கண்ட தாயாகிய பசுவானது மனவருத்தமடைந்து துள்ளித்துடித்துக்கதறிக்கீழேவிழுந்தது, அதைக்கண்டஇராஜகுமாரன் ஐயோஅபாயம்வந்ததேயென்று சொல்தடுமாறி அத்துயரிலைவருந்தி மயிர்சிலிர்த்து இந்தப்பசுவுங்கன்றும் என்னறிவின்பெருமைகெட அழிந்தனவே இதற்கென்னசெய்வேன் என்று தேரினின்றுமிழிந்து கீழேவிழுந்து அலறுகின்ற பசுவைப்பார்த்து உயிர்பதைத்துச் சோர்ந்து பூமியிலிறந்தகன்றை நோக்கி பெருமூச்சுவிட்டு அழுதுதில்லைப்பற்றவிவ்வுலகத்தைக் காக்கும் மநுவென்கிற என்கோமானுக்கு உலகத்தில் இந்தப்பழிவந்து சம்பவிக்கநான்பிறந்தேனன்றோவென்றுசொல்லிஇதனால்வந்தபாவத்தை பிராமணர்க ளிடத்திற்சென்று அவர்களால்சொல்லத்தக்க பரிகாரிகளால்நீக்கிக்கொள்வது அறமேயாதலால்அதையறிதற்குமுன்னர்செய்வேனென்று அந்தணர்முன்பாகச்சென்றான். அப்பொழுது பசுவானது மிகவுந்தளர்ந்துபெருமூச்சுவிட்டு மநுச்சக்கிரவர்த்தி அரண்மனைவாயிலிற்கட்டிய ஆராய்ச்சிமணியினிடத்திற்

போய் அந்தக்கொம்பினாலடித்தது அவ்வோசையானது மநுச்சோழரது செவியிற்கேட்டவளவில் அவர் தம்பிள்ளைப்பிராணனைக்கொண்டு போகவரும் இயமன் வாகனத்திற்கட்டிய மணியோசையோ வென்று சொல்லி என்றுங்கேளாத மணியோசை செவியிற்புகுந்த தென்னவென்று சிங்காதனம்விட்டிறங்கி ஆராய்ச்சிமணிகட்டியிருக்கிறவாயில்வந்தார் காவலாளர் எதிராகவந்து ஆண்டவரே ஒருபசுவந்துமணியைக்கொம்பினாலாட்டிய தென்றார்கள் மநுச்சோழரானவர் அவர்கள்சொல்லைக்கேட்டு வருத்தமடைந்து பசுவைப்பார்த்து உங்கள்அசாக்கிரதையினாலே இதற்குத்துன்பமுண்டாயிற்றென்று கோபிக்க ஒருபழமையான மந்திரி எதிராகவந்து சுவாமீ வீதிவிடங்கன்தேரிலேறிப்போகும்போது இப்பசுவின்கன்று தேர்ச்சக்கிரத்தி லகப்பட்டிறந்ததென அம்மந்திரி சொன்னவார்த்தையைக்கேட்ட இராஜாவானவர் மிகவுமனக்கலங்கி வியசனமடைந்தார் அவ்வாறு வியசனப்படுமநுச்சோழரது துக்கந்தைக்கண்டு மந்திரிகள்வணங்கி ஆண்டவரே வியசனப்படாதீர் அந்தப்பாவந்தீரும்படிக்கு பிராயச்சித்தமுண்டு அதுசெய்யுமென்றார்கள் அப்பொழுது சோழராசன் மந்திரிகளே நீங்கள் சொல்லுவது நியாயமல்ல பிராயச்சித்தம் பசுவடைந்த துன்பத்திற்கு மருந்தாகுமா பழிக்குப்பழி யென்பிள்ளையைக்கொடுப்பதே நியாயமென்று மநுச்சோழர் குமாரனைத்தயவிட்டு வரவழைத்து ஒருமந்திரியைப் பார்த்து இந்தபிள்ளையைப்பசுவின்கன்று இறந்தவீதியிலேகிடத்தித் தேரையவன்மார்பின்மேலே நடத்தென்றுகட்டளைகொடுக்க மந்திரியும்விடைபெற்றுச்சென்று தானவ்வாறுசெய்ய மனமில்லாமல் தன்பிராணனைவிட்டுவிட்டான்.

மந்திரியிறந்த செய்தியைக்கேட்ட மநுச்சோழர் பிள்ளையைத்தாமேயழைத்துக்கொண்டு பசுவின்கன்றிறந்த வீதியிற்சென்று தமது குலத்திற்கு ஓர்பிள்ளைதானிருக்கிறதென்பதை நினையாமற்றருமவழியிலேநடப்பதுதகுதியென்று, தன்குமாரனைக்கீழேகிடத்தித் தேருருளையானது பிள்ளைமார்பிலழுந்தும்படி தன்றேரை நடத்தினார். அச்செய்கையைக்கண்டு, உலகிலுள்ளோர் கண்ணீர்விட்டார்கள் தேவர்கள் மலர்மாரிபொழிந்தார்கள். அப்பொழுது பார்வதியும், பரமசிவனும் இடபாரூடராய்வந் தெதிர்நின்று, காட்சிகொடுத்து அநுக்கிரகஞ்செய்தார்கள். இறந்தபசுவின்கன்றுமே, வீதிவிடங்கனென்னுமிராஜகுமாரனும், மந்திரியும், சிவனுடைய திருவருளினாலே உயிர்த்தெழுந்தார்கள். மநுச்சோழரானவர் மகனையெடுத்து மார்போடணைத்து மனமகிழ்ச்சியடைந்தார். பார்ப்பதியும் பரமசிவனும் அந்தரமாக மறைந்தார்கள்.

௧

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# தேவாசிரியமண்டபச்சிறப்பு.



பூதகணங்களுக்குத் தலைவராயும், புற்றைத்தமக்கிடமாகக் கொண்டவருமாகிய எவற்றிற்குமுதலாயுள்ள கடவுள்வாழாநின்ற அழகிய ஆலயத்தின் பிரகாசம்பொருந்திய மதிலையுடைய திருவாயிலின் முன்னர்ப்பிரமன்-இந்திரன்-திருமால்-முதலியதேவர்கள் இடைவிடாது நிறைந்திருக்கின்ற தேவாசிரியமண்டபமானது-அடைந்தவர்களது துன்பத்தைநீக்காநின்ற அடியவர்களது திருமேனியிற்பூசிய திருநீற்றினாலும்-அவரதுநிறைந்த பரிசுத்தத்தினாலும் பஞ்சாக்ஷரவோசையொலியினாலும்-பரவியதிருப்பாற்கடலுக்கொப்பாயிருக்கின்றது அதனிடத்து பரமசிவன் தன்னைத்தானேவிரும்பி அடிமைகொண்ட அடியார்களும்-தங்கள்கரங்களினாலே திருத்தொண்டுசெய்யுமுறைமையையுடையவர்களும்-குற்றமற்ற திருமேனியிற்பூசிய திருநீறுபோல் உள்ளம்பரிசுத்தமானவர்களும் பஞ்சபூதங்களுநிலைகெட்டுக் கலங்கினாலும் உமையையொருகூறாகவுடைய பரமசிவனது திருவடியை மறவாதவர்களும் செல்வமும் வறுமையுமில்லாத செல்வத்தையுடையவர்களும்ஓடும்பொன்னுமொன்றாகநினைப்பவர்களும்-அன்போடு பரமசிவனை வணங்குதலேயன்றி வீட்டினையும் விரும்பாதமனவலியால் விளங்குகின்றவர்களும்முத்தாரமுதலிய ஆரங்களும்-கண்டிகைகளும் வஸ்திரங்களும்-பாரமென்றெறிந்து பரமசிவனது பணிவிடையல்லது வேறொன்றினும் இச்சையையாதவர்களும் ஆகிய இவ்வடியார்கள் நெருங்கியிருக்கின்ற இம்மண்டபத்திலுள்ள அடியவர்களது பெருமையை யென்னாற்சொல்லுந் தகைமையையுடையதன்றாயினும் ஆலாலசுந்தரர் சொல்லியதிருத்தொண்டத்தொகையிலுள்ளபடி சொல்லுகின்றேன்.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சுந்தரமூர்த்திநாயனார்புராணம்.

தண்கயிலையதுநீங்கிநாவலூர்வாழ் சைவனார்சடையனார்தநயனாராய், மண்புகழுமருட்டுறையானோலைகாட்டி மணமவிலக்கவன்றொண்டாயதிகைசேர்ந்து, நண்பினுடனருள்புரியவாரூர்மேவி நலங்கிளரும்பரவைதோணயந்துவைகித், இன்குலவும்விறன்மிண்டாதிறல்கண்டேதனர் திருத்தொண்டத்தொகையருளாறசெப்பினாரே.

செப்பலருங்குண்டையூர் நெல்லழைத்துத் திருப்புகலூர்ச்செங்கல் செழும்பொன்னாச்செய்து, தப்பின்முதுகுன்றார்தரும்பொருளாற்றிட்டுத் தடக்கெடுத்துச்சங்கிலிதோள்சார்ந்து நாதன் றொப்பிமணிகதுவவந் தாறாகிநிறீ புறுமுதலைசிறுமதலையுமிழநல்கி, மெய்ப்பெரியகளிறேறியருளாற்சேரவேந்தருடன்வடகயிலைமேவினாரே.

ஸ்ரீகைலாசகிரியிலே, அகண்டபரிபூரண சச்சிதானந்த ஸ்வரூபியாகிய பரமசிவனானவர், ஆன்மாக்களுக்கு அருள்செய்யும்பொருட்டு மாயாகாரியமாகிய எங்கள் சரீரம்போலாகாது சத்தியகாரியமாயுள்ள சரீரத்தையெடுத்து, தமது அருட்சத்தியாகிய பார்வதிதேவியோடுவீற்றிருப்பார் அக்கடவுளுக்குத் திருத்தொண்டுசெய்யும் அடியார்கூட்டத்திலே ஆலாலசுந்தரர் என ஒருவர் உளர். அவர் ஆதிகாலத்திலேஒருநாள் பக்தர்கள்செய்யும் அருச்சனையை அவர்கள்முத்திபெற்றுய்யும்பொருட்டு அங்கீகாரஞ்செய்தருளுகின்ற அக்கடவுளுக்குத் தரிக்கும்பொருட்டு, புஷ்பங்களைக்கொய்வதற்கு நந்தனவனத்துக்குப் போனபோது, பார்வதிதேவியாருக்குத் தரிக்கும்பொருட்டு அந்த நந்தனவனத்திலே புஷ்பங்கொய்துகொண்டுநின்ற அவருடைய சேடியர்களாகிய அநிந்திதை கமலினி என்னும் பெயர்களையுடைய பெண்களிருவரையும்கண்டு, அவர்கள்மேல் ஆசைவைத்தார். அவர்களும் ஆலாலசுந்தரரைக்கண்டு அவர்மேல் ஆசைகொண்டார்கள். பின்பு ஒருபிரகாரம் மனதைத்திருப்பி, புஷ்பங்களைக்கொய்துகொண்டு, ஆலாலசுந்தரர் சுவாமிசந்நிதானத்துக்கும், சேடியர்கள் தேவிசந்நிதானத்து[illegible], தி

ம்பிவிட்டார்கள். அப்பொழுது, சமஸ்த ஆன்மாக்களிடத்திலும் வியாபி த்திருந்து அந்த அந்த ஆன்மாக்கள்மனம் வாக்குக்காயங்களினாலே செய்கின்ற கர்மங்களை அறிந்து அந்த அந்தக் கர்மங்களுக்கு ஏற்றபலங்களை ஊட்டி அக்கர்மங்களைத் தொலைப்பிக்கின்ற காருண்ணிய ஸ்வரூபியாகிய கடவுளானவர் ஆலாலசுந்தரனை நோக்கி, நீபெண்கள்மேல்இச்சைகொண்டபடியால் தக்ஷணபூமியிலே மானுடதேகம் எடுத்துப்பிறந்து அந்தப்பெண்களோடுபுணர்ந்து இன்பம்அனுபவிப்பாய்என்று திருவாய்மலர்ந்தருளினார். அதைக்கேட்ட ஆலாலசுந்தரர்மனங்கலங்கி, சந்நிதானத்திலே சாஷ்டாங்கமாக நமஸ்காரம்பண்ணி, எழுந்துநின்று அஞ்சலியஸ்தராகி, சுவாமீ தேவரீருடைய அருமைத்திருவடிகளைப்பிரிதற்கு ஏதுவாகிய கொடும்பாவத்தைச் செயதவனாகிய சிறியேன் மயக்கம்பொருந்திய மனிதப்பிறப்பைஎடுத்து, செய்யவேண்டியது இன்னதுஎன்றும் நீக்கவேண்டியது இன்னதுஎன்றும்அறியாமல்பிரபஞ்சவாழ்க்கையிலே மயங்கும்போது, தேவரீர்வெளிப்பட்டுவந்து அடியேனைத்தடுத்து ஆட்கொண்டருளவேண்டுமென்று பிரார்த்திக்க, வேண்டுவார்கேட்டவைகளை ஈந்தருளும் கடவுளும் அவ்வேண்டுகோளுக்கு இசைந்தருளினார்.

பின்பு ஆலாலசுந்தரர், பூமியிலே புண்ணியபூமியாகிய பாதகண்டத்திலே தமிழ் வழங்கும் நிலமாகிய தென்னாட்டைச்சேர்ந்த திருமுனைபபாடி நாட்டிலே திருநாவலூரென்னுந் திருப்பதியிலே ஆதிசைவரென்னும் பிராமணகுலத்திலே சடையனாரென்னும சிவாசாரியருக்கு அவருடைய மனைவியாராகிய கற்பிலேசிறந்த இசைஞானியார் என்பவரிடத்திலே, ஆன்மாக்கள் சைவசமயமேமெய்ச்சமயமென்றுஉணர்ந்து அதனை அனுசரித்து உய்யும்பொருட்டு, பிறந்தருளினார். பிறந்தஅப்பிள்ளைக்கு நம்பியாரூரர் என்று நாமகரணஞ்செயதார்கள். அந்தப்பிள்ளை ஒருநாள் வீதியிலே சிறுதேர் உருட்டி விளையாடும்போது, அந்தத் திருமுனைப்பாடி நாட்டுக்கு அரசராகிய நரசிங்கமுனையரென்பவர் அந்தப்பிள்ளையைக்கண்டு, அவர்மேல் ஆசைமிகுந்து, அவருடையதந்தையாராகிய சடையனாரிடத்துக்குப்போய், இந்தப்பிள்ளையை எனக்குத் தாருமென்றுகேட்டுப்பெற்றுக்கொண்டுபோய்-அவரை அபிமானபுத்திரராகபபாவித்துவளர்த்தார். அந்தப்பிள்ளை அரசரால்வளர்க்கப்படினும்-தமது பிராமணவருணத்திற்கு உரியஒழுக்கததையே உடையவராகி வளர்ந்து-உரியகாலத்திலே உபநயனஞ்செய்யப்பெற்று வேதங்களை அத்தியயனஞ்செய்து- சகலகலைகளிலும் மகாபாண்டித்திய முடையராய-விவாகஞ்செயதற்கு உரியபருவத்தை அடைந்தார்.

அதுகண்டு, தந்தையாராகிய சடையனார் ஆதிசைவர்குலத்திலே தம்முடைய கொள்வகைக்கு ஏற்பதாயுள்ள புத்தூரில் இருக்கின்ற சடங்கவிசிவாசாரியரிடத்திலே, அவருடைய புத்திரிக்கும் தம்முடைய புத்திரருக்கும் விவாகம்பேசிவரும்பொருட்டு சிலமுதியோர்களை அனுப்பினார். அவர்கள் சடங்கவிசிவாசாரியரிடத்திற் போய்ப்பேசி-அவர் உடன்பட்டதுகண்டு சடையனாரிடத்துக்குத் திரும்பிப்போய்த் தெரிவித்தார்கள். அப்பொழுது சடையனார் மகிழ்ச்சிகொண்டு-விவாகத்துக்கு முகூர்த்தம்விதித்து-தம்முடைய ஞாதிகள் சிநேகிதர்கள் யாவரையும் விவாகபத்திரம் அனுப்பி அழைப்பித்தார் பின்பு நம்பியாரூராகிய சுந்தரமூர்த்திநாயனார் விவாகதினத்துக்கு முதற்றினத்திலே சமாவர்த்தனம்பண்ணி-சகூடாங்கனஞ்செய்து-மற்றுமுள்ள வைதிககர்மங்களை முடித்துக்கொண்டு - மணக்கோலங்கொண்டு- குதிரைமேலேறி-மகா அலங்காரத்தோடு புத்தூரிலே சடங்கவிசிவாசாரியார்வீட்டிலே இருக்கும் கல்யாணப்பந்தருக்கு முன்சென்று-குதிரையினின்றும் இறங்கி-உள்ளேபோய்-ஆசனத்தில் இருந்தார்.

அப்பொழுது-ஊரும்பேரும் உருவும் இல்லாதவர் ஆயினும் ஆன்மாக்களுக்கு வினையினால்வந்த வாஸ்தவமாகிய ஊரையும்பேரையும் உருவையும் இருவினையொப்பாகிய பக்குவகாலத்திலே ஒழிக்கும்பொருட்டுக் கற்பிதமாகிய ஊரும்பேரும் உருவுங்கொண்டருளுகின்ற பரமசிவனானவர்-தாம் கைலாசத்திலே சுந்தரமூர்த்திக்கு வாக்குத்தத்தம்பண்ணியபிரகாரம் அவரைப்பிரபஞ்சவாழ்க்கையிலே மயங்கவிடாமல் தடுத்து ஆட்கொண்டருளும்பொருட்டு - ஒருவயோதிகப்பிராமணவடிவங்கொண்டு - அவ்விடத்திலே எழுந்தருளிவந்துநின்று- இவ்விடத்தில் இருக்கின்றயாவர்களும் நான்சொல்லும் இவ்வார்த்தையைக்கேளுங்கள் என்றுசொன்னார். அப்படிச்சொல்லிய அந்த ஐயரைவிவாகஞ்செய்யத்தொடங்கும் நம்பியாரூரரும் அங்கிருக்கின்ற மற்றப்பிராமணர்களும் பார்த்து-இவ்விடத்திலே நீர்சொல்ல விரும்பியதைச் சொல்லும் என்றார்கள் அதைக்கேட்ட ஐயர் நம்பியாரூரரைநோக்கி எனக்கும் உனக்கும் ஒருவழக்கு இருக்கின்றது அதை முடித்துக்கொண்டு உன்னுடைய விவாகத்தைநடத்து என்று அருளிச்செய்தார், நம்பியாரூரர் உமக்கும் எனக்கும் ஒருவழக்கு உளதாயின்-அதைமுடித்தன்றிநான் விவாகஞ்செய்யேன். நீர் அவ்வழக்கு இன்னதெனத் தெரியும்படி சொல்லுமென்றுகேட்க அந்தஐயர் பிராமணர்களைப்பார்த்து-இந்தத் திருநாவலூரனாகிய நம்பியாரூரன் எனக்கு அடியவன் என்றுசொல்லியருளினார் அதைக்கேட்ட நம்பியாரூரர் இந்த ஐயர்சொன்னவார்த்தை நன்றாயிருக்கின்றது என்று இகழ்ச்சியாகச்சொல்லிச்சிரிக்க பிராமணவேடங்கொண்டகடவுள் அவருக்குச் சமீபத்திலேபோய், அக்காலத்திலே உன்னுடைய பாட்டன் எனக்கு எழுதித்தந்த அடிமையோலை இதுவே. அப்படியிருக்க-இந்தக்காரியத்தைக்குறித்து நீ பரிகாச

ண்ணியது என்ன என்றார். உடனேநம்பியாரூரர் ஐயரைப்பார்த்து பிராமணருக்குப்பிராமணர் அடிமையாதல் இன்றைக்கு நீயேசொல்லக்கேட்டோம். நீ பித்தனோஎன்றுசொல்ல ஐயர்-நான்பித்தனானாலும் ஆகுக. பேயனானாலும் ஆகுக. நீ இப்போது எத்தனைவசைமொழிகளைசொன்னாய் அவைகளினால் நான்சிறிதாயினும் வெட்கம் அடையேன். நீ என்னைச்சிறிதும்அறிந்திலை. இப்படிநின்று விளையாட்டுமொழிகள் பேசவேண்டாம் அடிமைத்தொழில் செய்யவாஎன்றார். அப்பொழுது, நம்பியாரூரர், இவர்அடிமைபோலே ஒன்று உண்டென்றுரோ அதின்உண்மையை அறியவேண்டுமே என்றுநினைத்து ஐயரே, உமமுடைய ஓலையைக்காட்டும் என்றுசொல்ல, ஐயர் நீயிந்தவோலையைப்பார்த்து நிச்சயிக்கத்தக்கவனோ, நான் இந்தச் சபையாருக்குஓலையைக்காட்டி மெய்யென்று அங்கிகாரஞ்செய்வித்தபின், எனக்கு ஊழியஞ்செய்தற்குமாத்திரம் தக்கவன்என்றார். அதுகேட்ட நம்பியாரூரர்கோபங்கொண்டு அவர்கையில் இருக்கும் ஓலையைப்பறிக்கும்படி அவருக்கு எதிரேவிரைந்து சென்றபோது, அவர் ஓடத்தாமோடி, அவரைப்பின்றொடர்ந்துபிடித்து, ஓலையைப்பறித்து, பிராமணர்கள் அடிமையாய் ஊழியஞ்செய்தல் என்னமுறையென்றுசொல்லிக்கிழிக்க ஐயர்சுந்தரமூர்த்தியைப்பிடித்துக்கொண்டு, ஒருதரம் இதுமுறையோவென்றுசத்தமிட, சமீபத்தில் நின்றவர்கள் அவ்விருவரையும் விலக்கி, உலகத்திலே ஒருகாலமும் நடந்திராத ஏற்பாட்டைக்கொண்டுவழக்காடுகின்றபிராமணரே, நீர் எங்கே இருக்கிறவர்சொல்லும் என்றார்கள் அதற்குஐயர் நான்இந்தத் திருவெண்ணெய் நல்லூரில் இருக்கிறவன் அதுநிற்க-இந்தநம்பியாரூரன் தருமவழிக்கு விரோதமாக வலாத்காரம்பண்ணிஎன் கையில் ஓலையைப்பறித்துக்கிழித்தலினாலே-தான்எனக்கு அடியவன் என்றதை ஸ்திரப்படுத்தினான் என்றார். அப்பொழுது-சுந்தரமூர்த்திநாயனார்-நீர்திருவெண்ணெய் நல்லூரில் இருக்கிறவரானால்இந்தவழக்கை அங்கேதானேபேசித் தீர்ப்புச்செய்யவாரும் என்றுசொல்ல ஐயர் அதைக்கேட்டு திருவெண்ணெய்நல்லூரில் இருக்கின்ற பிராமணர்களுக்குமுன்னே ஆதியில் எழுதப்பட்ட மூலவோலையைக்காட்டிநீஎனக்கு அடிமை என்பதைச்சாதிப்பேன் என்றுசொல்லி-தண்டைஊன்றிக்கொண்டு முன்னேநடந்தார். சுந்தரமூர்த்தியும்மற்றப்பிராமணர்களும் பின்னாகப்போனார்கள்.

ஐயர்தனக்குப்பின்வந்த சுந்தரமூர்த்தியோடும் மற்றப்பிராமணர்களோடும் திருவெண்ணெய் நல்லூரை அடைந்து அங்கு இருக்கின்ற பிராமணர்களுடைய சபையிலேபோய்-அவர்களைநோக்கி அறிவால் அமைந்த பெரியோர்களே-திருநாவலூரில் இருக்கின்ற ஆரூரனென்பவன் தானெனக்கு அடிமையென்று காண்பித்த ஓலையைக்கிழித்துவிட்டு உங்களிடத்தில்வந்திருக்கிறான் என்றுசொல்லி முறைப்பாடுசெய்தார். அந்த அபியோகத்தைக்கேட்ட பிராமணர்கள் ஆரூரனைப்பார்த்து

பிராமணர்கள் அடிமையாதல் இவ்வுலகத்திலே இதுவரையிலுமில்
லை. ஐயரோ-நீர் என்னதப்புவார்த்தைசொன்னீர் என்றுசொல்ல ஐயர்
நான்பொய்வழக்குக் கொண்டுவரவில்லை. மெய்வழக்கே,கொண்டுவ
ந்தேன். இவன் பறித்துக்கிழித்த ஓலை இவன்பாட்டன்தானும் தன்
மரபினரும் எனக்கு அடிமையென்று எழுதித்தந்த அடிமையோலை
என்றார். உடனேபிராமணர்கள் சுந்தரமூர்த்தியை நோக்கி-இவர் உம்
முடைய பாட்டன் அடிமைசெய்தற்கு இசைந்து எழுதிக்கொடுத்த ஓ
லையைக்காட்டினாரில்நீர் அதைப்பறித்துக்கிழித்ததனால்உம்முடைய
பட்சம் சயம்பெறுமோ-இவர் தம்முடைய வழக்கையாவரும் அங்கீகரி
க்கும்படிசொன்னார். இனிமும்முடைய எண்ணம்யாது. என்றார்கள்,
அதற்குச்சுந்தரமூர்த்தி,வேதாகமம் முதலாகிய சமஸ்த சாஸ்திரங்களை
யும் உணர்ந்த மகான்களே நான் ஆதிசைவன் என்பது உங்களெல்லா
ருக்குந்தெரியும் அப்படியிருக்க இந்தப்பிராமணர் தமக்குஎன்னை அ
டிமையென்று சாதித்தாராகில், இதுமனசினால் அறிதலகூடாத ஒரு
மாயையென்று நினைக்கவேண்டும் இதைக்குறித்து நான்யாதுசொல்
வேன் இது எனனால் அறியப்படுதல்கூடாது என்றுசொல்ல, பிராம
ணர்கள்கேட்டு,அந்த ஐயரைப்பார்த்து நீர் இவனை உம்முடைய அடி
மை என்றுசொல்லுகின்ற விவகாரத்தை எங்களுக்கு முன் உறுதிப்
படுத்தவேண்டும் ஒருவிவகாரத்தை உண்மையென்று நிச்சயிப்பதற்கு
அநுபவம் லிகிதம் சாட்சிஎன்கின்ற மூன்றும்வேண்டும். ஆயினும், இ
ந்தஆரூரர் உமக்கு அடிமையென்பதற்கு அம்மூன்றில் ஒன்றாயினும்
காட்டும் என்றார்கள். அப்பொழுது ஐயர், இவன்கிழித்த ஓலை மூல
வோலையைப்பார்த்து எழுதியபடியோலை-மூலவோலையோ எனனிடத்
தில் இருக்கின்றது என்றுசொன்னார். உடனே பிராமணர்கள்,அதை
எங்களுக்குக்காட்டும் என்றுசொல்ல, ஐயர் ஆரூரன் அதையும்பறித்
துக் கிழியாதபடிசெய்வீர்களாயின், அதைக்காட்டுவேன் என்றார் அ
தற்கு,பிராமணர்கள் நாங்கள்கிழிக்கவிடோமென்றுசொல்ல ஐயர் மூ
லவோலையைக்கையில் எடுத்தார், அப்பொழுது சபையாருடையகட்
டளையினால் ஒரு கரணன் அவரைக்கும்பிட்டு அந்த ஓலையைவாங்கி
சுருளாயிருக்கின்ற மடிப்பைநீக்கிவிரித்து, சபையார் கேட்கும்படி
திருநாவலூரில் இருக்கின்ற ஆதிசைவனாகிய ஆரூரன் என்கின்றநா
ன் திருவெண்ணெய் நல்லூரில் இருக்கின்ற பித்தனுக்குநானும் என
சந்ததியாரும் வழித்தொண்டுசெய்வதற்கு உள்ளும்புறமும்ஒப்ப உட
ன்பட்டு எழுதிக்கொடுத்தேன். இப்படிக்கு ஆரூரன்என்றுவாசித்தா
ன்.பின்பு,அந்தஓலையிலே சாட்சிகளாகக் கையெழுத்து இட்டவர்கள்
தங்கள் கையெழுத்தென்றே ஒத்துக்கொண்டார்கள். அதைக்கண்ட
பிராமணர்கள் சுந்தரமூர்த்தியை நோக்கி, இது உம்முடையபாட்டனு
டையஎழுத்தோ,பாரும் என்றுசொல்ல, ஐயர் அவர்களைப்பார்த்து, இ
தற்கிறவன் அடிமையோலையில் எழுதியிட்டிருக்கின்ற தன்பாட்டன்

கையெழுத்தைக்கண்டவீரே, சுந்தியுள்ளவீரே, இவன்பாட்டனெழு
தியவேறு கைச்சாத்துவண்டாகில் வருவித்து இதனுடனொத்துப்பார்
த்து, உங்கள்மனதிலே தோன்றிய தீர்ப்பைச் சொல்லுங்களென்றார்
அதைக்கேட்ட பிராமணர்கள் சந்தேகந்தெளியும்படி, சுந்தரமூர்த்திச
முகத்திலே அவர்பாட்டனார் எழுதிய கைச்சாத்து ஒன்று அழைப்
பித்து, அதின் எழுத்தையும் அடிமையோலையினெழுத்தையுமொத்து
ப்பார்த்து, இவ்விரண்டும் ஒத்திருக்கின்றன. இனி நீர் தப்பவழியில்
லை நீர் இந்தப்பிராமணருக்குத் தோற்றுப்போனீர். ஆதலால், அவர்
இஷ்டப்படி அவருக்கு ஏவல்செய்வதேகடன் என்றுசொல்ல-சுந்தர
மூர்த்தி-விதிமுறை இதுவேயானால்-நான் இதற்கு உடன்படாதிருத்தல்
கூடுமோவென்று சொல்லுகின்றார். அப்பொழுதுபிராமணர்கள் அந்த
அய்யனைப்பார்த்து நீர்காட்டிய அடிமையோலையிலே எங்கள்ஊரோடும்
முடையவனாகவெழுதப்பட்டிருக்கின்றது. ஆதலால் - உமக்கு இவ்வூரி
லே தலைமுறையாக இருக்கின்றவீடும் நிலையுள்ள ஆஸ்தியுங்காட்டும்
என்றுசொல்ல பிராமணவடிவங்கொண்ட கடவுள் இத்தனைவிருத்த
ர்களில் ஒருவரும் என்னுடைய வீடுமுதலியவற்றை அறியாமல் இரு
ப்பீரானால் காட்டுகிறேன். வாருங்களென்றுசொல்லி சுந்தரமூர்த்தியு
ம்பிராமணர்களும் பின்னேவர தாம்அவ்வூரிலிருக்கின்ற திருவருட்டு
றையென்னும் சிவாலயத்தினுள்ளே போனார். பின்புசபையார்அவரை
க்காணாமல் திகைத்து நின்றார்கள்

அப்பொழுது சுந்தரமூர்த்தியானவர் என்னை அடிமைகொண்ட
பிராமணர் எங்கள் கடவுளாகிய பரமசிவன்வீற்றிருக்கும் கோயிலினு
ள்ளேபுகுந்தது என்னஆச்சரியம் என்றுநினைத்து அத்தியந்தஆசை
யோடும தனியேஅவரைத்தொடர்ந்து போய்க்கூப்பிட பரமசிவனானவர்
தநமவடிவாகிய இடபவாகனத்தின்மேலே பார்வதிசமேதராயவெளி
ப்பட்டு சுந்தரமூர்த்திக்கு நீ முன்னே நமக்குத்தொண்டனாய் இருந்
தாய நீ பெண்கள்மேல் இச்சைவைத்ததினால் நம்முடையஆஞ்ஞை
யினாலே பூமியிலேபிறந்தாய். இப்பொழுது துன்பத்தைத்தருகின்ற
சமுசார பந்தமானது உன்னைத்தொடராதபடி நாமேவலியவந்து உன்
னைத்தடுத்து ஆட்கொண்டோம் என்றுதிருவாய்மலர்ந்தருளினார் இந்
தப்பிரகாரமாக எழுந்தசத்தத்தைக்கேட்டு சுந்தரமூர்த்தியானவர்தன்
னையீன்றபசுவினது குரலைக்கேட்ட கன்றுபோலஅலறி சரீரமுழுது
ம் உரோமப்புளகங்கொள்ள இரண்டுகண்ணினின்றும் ஆனந்தபாஷ்
பம்பொழிய அடியற்றமரம்போல நிலத்திலே விழுந்துநமஸ்கரித்து
எழுந்துநின்று இரண்டுகைகளையும் சிரசின்மேல் ஏறக்குவித்துகன
கசபையிலே படைத்தல்காத்தல் அழித்தல்மறைத்தல் அருளலென்
கின்ற அய்ந்தொழில் ஆகியதிருநடனத்தைச்செய்தருளுகின்றசுவாமீ
தேவரீர் ஒன்றுக்கும் பற்றாத சிறியேனை மார்ச்சாரசம்பந்தம்போல
வலியவந்து தடுத்தாட்கொண்ட கிருபையினை இருந்தபடி

திருவெண்ணெய் நல்லூரில் திருவருட்டுறையென்னும் ஆலயத்தி லெழுந்தருளிய பரமசிவனாரை - சுந்தரமூர்த்திநாயனார் - பாடியதிருப்பதிகத்தைத் திருச்செவி மகிழும்படி கேட்டு இன்னும் நமது புகழினைப் பலவகையாகப் பாடென் றருளிச்செய்தார்.

இக்கதையிற்கப் புத்தூரில்வாழும் சைவப் பிராம்மணராகிய சடங்கவியார்மகளும் மணந்தவிர்ந்த செய்கையால் சுந்தரமூர்த்திசுவாமியை மனத்திற் றியானஞ்செய்து நல்வழியினின்று - கிடைத்தற்கரிய சிவலோகமு மெளிதிலடைக்கும்படி பெற்றாள்.

சுந்தரமூர்த்திசுவாமி, தம்மைப் பரமசிவன் தடுத்தாட்கொண்ட பின்பு, திருநாவலூராக வெழுந்தருளி அந்தலத்தி லெழுந்தருளிய பரமசிவனையும் திருத்துறையூர்க்குப்போய் அங்கெழுந்தருளிய பரமசிவனையும் - மற்றும் பலவாலயங்களிற்போய் அங்குள்ள எம்பெருமானையும்-பாடிச் சிதம்பரத்திற் செல்ல நினைந்து திருவுளங்கொண்டார் - அதன்பின் பெண்ணையாற்றைக் கடந்து திருவதிகைத் தலத்தருகிலே-சித்தவடமடத்திற்குப்போய் நித்திரைசெய்கையில்-கெடிலநதிக்கு வடபுறத்தில் வீரட்டானத்திலெழுந்தருளிய சுவாமியானவர் விருத்தப்பிராமணராய் அம்மடத்திற் புகுந்து சுந்தரமூர்த்தி சுவாமிகள் சிரசின்மேல் தம்முடைய திருவடிகளை ஆனந்தநித்திரை செய்பவர்போல், அமைத்தருளினார். (இது திருவடிதீட்சையாம்) சுவாமி திருவடிகளை நீட்டியதைச் சுந்தரமூர்த்திநாயனாரறிந்து பிராமணரே, உம்முடையபாதங்களை என் திருமுடிமேல் வைக்கலாமோவென்னச் சுவாமி- விருத்தாப்பியத்தால் யானறியாமல் காலை நீட்டினேனென்றார்.

சுந்தரர்கேட்டு வேறுதிசையில் சிரசைவைத்து நித்திரைசெய்தார்-சுவாமி அவ்விடத்திலுஞ்சென்று சுந்தரர்திருமுடியில் தமது திருவடியைவைக்க, ஆரூரனுஞ்சுந்தரர் இவ்விடத்திலு மென்னை மிதித்தவா-நீர் யாவரென்றுகேட்க காளகண்ட திரிநேத்திரமுடைய சுவாமி யென்னையறியாயோவென்று மறைந்தார்-சுந்தரமூர்த்திநாயனார்-சுவாமி தம்மைத்திருவடிகளால் மிதித்ததையறிந்து முன்னமே சுவாமியென்றறியாமற் போனேனேயென்று திருவதிகைவீரட்டானத்தலத்தில் கைலாயபதியைப்பாடினார்-பின்பு திருக்கெடிலநதியிலே ஸ்நானஞ்செய்து விஷ்ணுபூசித்த திருமாணிக்குழியென்னுந் தலத்திற்போய்ப் பரமசிவனை-வணங்கிச் சித்தபாதத்தி லெழுந்தருளிப் பலவளங்கள்பொருந்திய மாடவீதியைவலமாகவந்து வடபக்கத்துத் திருக்கோபுரவாயிலிற்புகுந்து-திருச்சிற்றம்பலத்தைக்கண்டு- திருக்களிற்றுப்படியிலேயிருந்து திருகரமுஞ்சிரமேற்குவித்து ஆனந்தக்கண்ணீரங்கமெங்குஞ்சிந்த- அழ

விழுந்தெழுந்து அன்பினாலுருகிச் சபாநாயகரைவணங்கினார்-சபாநாயகர்திருவருளினால் ஆகாயத்திலே சுந்தரமூர்த்தியே. திருவாரூரிலே நம்மிடத்திற்கு நீர்வருகவென்றுஒருதிருவாக்குப்பிறந்தது.

அந்தத்திருவாக்கைச் சுந்தரமூர்த்திநாயனார் சிரசின்மேல்வைத்துப் பொன்னம்பலத்தை வலமாகவந்துவணங்கிக்-கோபுரவாயிலைக்கடந்து கொள்ளிடமென்கிற நதியைத்தாண்டிச் சீகாழியென்னும் திருப்பதிக்கெழுந்தருளினார்- திருஞானசம்பந்தசுவாமிகள் திருவவதாரஞ்செய்த-சீகாழியைமிதியாமல் அப்பதியை வந்தனஞ்செய்து வலம்வருகையில் அவ்வூர்ச்சட்டநாதசுவாமிகள் எதிராகவந்துகாட்சிகொடுத்தார்- சுந்தரசுவாமிகள் கைலைவாசனைக்கண்டுகொண்டேனென்று திருப்பதிகம்பாடினார்-சுவாமிமறைந்தபின்பு ஆரூரரென்னுஞ்சுந்தரர் திருக்கோலக்காவென்னுந்தலத்தை வந்தனஞ்செய்துபதிகம்பாடித் திருப்புன்கூரிலே சென்று கடவுளைவணங்கி அங்கும்பதிகம்பாடிப் பலதலங்களிலும்போய்ப் பரமசிவனைவணங்கிக் காவேரியிலேஸ்நானம்பண்ணி மாயூரமென்னும் ஸ்தலத்தையும்-அம்பர்மாகாளமென்னும் ஸ்தலத்தையும்-திருப்புகலூர் ஸ்தலத்தையும், வணங்கித் திருவாரூருக்கெழுந்தருளினார். திருவாரூரில் எழுந்தருளியிருந்த தியாகேசர் அடியார்களைக்குறித்து நம்முடைய ஆரூரர்நாமழைத்தலால்வருகிறார், நீங்களெதிர்கொண்டுகொணருங்களென்றார்-அவர்களுமெதிர்கொண்டார்கள். வீதிகளிற்கொடிகளுமகரதோரணங்களுங்கட்டினார்கள்-வாழைமரங்களுங்கமுகமரங்களுநாட்டினார்கள் - எங்குமணிவிளக்கேற்றினார்கள்-பூப்பந்தலிட்டார்கள்- பூரணகுடம்வைத்தார்கள - பனிநீர்தெளித்தார்கள்- சந்தனக்கோலமிட்டார்கள்- சங்கீதம்பாடினார்கள்- பெண்கள்நடனமாடினார்கள்- பலவிதவாத்தியமுழக்கினார்கள்- பெரியோர்களு மற்றவர்களு மெதிர்சென்று வணங்கிக்கொண்டார்கள்.

சிவபத்தர்கள்புடைசூழ்ந்துவரச் சுந்தரசுவாமிகள் திருவாரூர்த் திருக்கோபுரவாயிலையடைந்து கற்பகமலர்மாலைபரிமளிக்கும் தேவாசிரியமண்டபத்தைத்தொழுது அன்புடனே சிரசின்மேற்குவித்ததிருக்கரங்களோடு தியாகேசர்வீற்றிருக்கும் மூலட்டானத்தைச்சூழ்ந்த திருமாளிகைவாயிலையடைந்து புற்றிடமான தியாகரைவணங்கி-மனங்கசிந்துருகி ஐம்பொறிகளுமொருவழிப்பட்டுப் பேரின்பவெள்ளத்திலழுந்திப் பதிகம்பாடினார் - தியாகர்கிருபையால் அசரீரிவாக்கானது, நீமணமுடித்தாசைநீங்க வாழக்கடவாய் என்றுஉண்டாயிற்று-சுந்தரசுவாமிகள் இவ்வசரீரிவாக்கைக்கேட்டு அன்புபெருகிமாணிக்கக்குன்றமே, மாசற்றதீபமே, என்னைத் தடுத்தாட்கொண்ட சிவக்கொழுந்தே, தேடக்கிடையாத்திரவியமே, என்றுபணிந்துதிருவாரூர்ச்சிவாலயத்திற்போய்க்கொண்டிருக்குங்காலத்தில்.

கைலாயபதி யிடப்பாகநாயகியாகிய உமையவளுக்குத் தொண்டு செய்யுந்தோழியாகிய கமலினியென்பவர் திருவாரூரில் உருத்திரகணிகையர்குலத்தில் அவதரித்துத் திருவாதிரைநாளில் பரவையாரென்று நாமஞ் சாத்தப்பட்டுத் தளர்நடைப்பருவமடைந்தார் அதன்பின்பு நற்பருவகாலத்தில் திருவாரூர்த் தேவாலயத்தில் சிவதரிசனை செய்யச் செல்லுகையில் சுந்தரமூர்த்திசுவாமிகள் விதிகூட்டுமுறைப்படிபரவைநாச்சியாரைக்கண்டு இப்பெண்ணரசியானவர் மின்னற்கொடியோ,மேனகையோ,மதனரதியோ, மாணிக்கதீபமோ,பரமசிவத்தின்கிருபைதானோ வென்றதிசயித்துநிற்கையில் - பரவைநாச்சியாரும் யௌவனம் பொருந்திய சுந்தரசுவாமிகளை அன்போடுபார்த்துமயங்கித் தியங்கிநின்று நீங்காவாசையுடனே திருக்கோயிலுக்குட் சென்றார். சுந்தரசுவாமிகள் அருகிலிருந்தவர்களைப்பார்த்து இப்பெண்ணரசியாரென்றுகேட்க பரவைநாச்சியாரென்றுசொன்னார்கள், சுந்தரருங்கோயிலுக்குட்சென்றார், பரவைநாச்சியார் சந்நிதியைவலம்வந்து புறப்பட்டார், சுந்தரசுவாமிகள்கண்டு பரவைநாச்சியாரைப்புணர விருப்பங்கொண்டு தியாகேசரைத்தொழுதார் பரவைநாச்சியாரும், மறையச் சுந்தரசுவாமிகள் எனக்கிச்சையைவிளைவித்த பெண்ணரசியானவர் எப்படிப்போயினரென்று தேடித் தேவாசிரியமண்டபத்தைச்சேர்ந்து பரவைநாச்சியார் மேல்வைத்த ஆசையால் காமத்துன்பக்கடலு ளழுந்தியிருக்கையில் பரவைநாச்சியார் பாங்கிமார்கள்புடைசூழ்ந்துவரச் சுந்தரசுவாமிகளிடத் திச்சையுடனே தன்னுடைய திருமாளிகையிற்சேர்ந்து பஞ்சணையி லிருந்து தன்னுயிர்ப் பாங்கிகளைப்பார்த்து நாமெல்லாஞ் சந்நிதிக்குப் போகும்போது எதிராகவந்த அழகுள்ளபுருஷர் யாரென்றுகேட்க,பாங்கிமார்கள் எங்கள்குலக்கொழுந்தே, அவர்சைவப்பிராமணர் - ஆண்டவராலே தடுத்தாட்கொள்ளப்பட்டவர் நம்பியாரூரரென்னும் பெயரியுமுடையவரென்றார்கள்.

பரவைநாச்சியார் காமாக்கினியில் வருத்தமடைந்து பெருமூச்செறிந்து சுந்தரமூர்த்திகளின்மேல் மனதைச்செலுத்தி மதிமயங்கித் தன்னையுமறந்திருக்கையிற் பாங்கிமார்கள் காமவெப்பந்தீரும்படி சாந்திசெய்தார்கள்-இருவர்செய்கையையுந் திருவாரூரிலெழுந்தருளிய தியாகேசரறிந்து தம்மடியார்களுக்குப் பரவைநாச்சியாருக்குஞ் சுந்தரசுவாமிகளுக்குந் திருக்கலியாணஞ் செய்விக்கவேண்டுமென்று சொப்பனத்திற் கட்டளையிட்டுப் பரவைநாச்சியாரிடத்திற்போய்ச்சுந்தரர்க்குமுனக்குந் திருக்கலியாணநடக்குமென்று திருவருள்செய்தார், பொழுதுவிடிந்து சிவபத்தர்கள்வந்து இருவருக்குந் திருக்கலியாணத்தைவேதாகமவிதிப்படி செய்வித்தார்கள் இருவருஞ் சிற்றின்பத்தையநுபவித்தார்கள், இப்

வாறிருந்து சுந்தரசுவாமிகள் திருக்கூட்டங்கள்புடைசூழ்ந்துவரத்திரு க்கோயிலுக்குள்ளே தியாகேசனைவணங்கச்சென்றார் தியாகரெதிர்கொ ண்டுவரச் சுந்தரர் சுவாமிதிருவடிகளைத்துதிசெய்துநிற்கச் சுவாமி சுந்த ரருக்குத்திருக்கூட்டத்தார்திருப்புகழைச்செந்தமிழினற்பாடென்றுதிரு வுளமகிழ்ந்து திருவருள்செய்யச் சுந்தரர் சிவபத்தர்கள் தன்மையைத் தெரியாதசிறியேன் செந்தமிழ்பாடத் திருவருள்செய்யுமென்னச் சுவா மி தில்லைவாழந்தணர்தம்மடியார்க்குமடியேன்-என்னும் வாக்கியத்தை முதலாகவைத்துத் திருத்தொண்டத்தொகையாகிய திருப்பதிகப்பாமா லையைச் சுவாமிதிருவாக்கா லொருவாக்கருளிச் செய்யென்ன சுந்தரமூ ர்த்திநாயனார் சுவாமிதிருவாக்குக் கெதிர்வாக்கில்லாமல் அவ்வாறுபா டிச் சிவனடியாராகிய திருக்கூட்டத்திற்சேர்ந்து சிந்தை களிகூர்ந்து பத்தியோடுபணிந்து சித்தியோடிருந்தார்.

---



உ

திருச்சிற்றம்பலம்

# தில்லைவாழந்தணர்சரித்திரம்.

---

திருத்தொண்டத்தொகை, பதினொருபாட்டும் பதினொருதிருக்க மாகச் சிவனுடையதிருவருளால் சுந்தரமூர்த்திநாயனார் திருவாய்மலர்ந் தருளினார், இரணியவர்மராசனெனவன் வெண்குட்டம்பிடித்து மிகவும் வருத்தமடைந்து பலதலங்களிற்சென்றும், குட்டநோய்தீராமல் சிதம் பரத்தில்வந்து-பதஞ்சலிவியாக்கிரபாதர் சொற்படிக்குச்சிவகங்கையில் ஸ்நானஞ்செய்து அக்குட்டநோய்நீங்கிற்று, அதுகண்டு அவ்வரசன்ம கிழ்ச்சிகொண்டு கனகசபைமுதலிய திருப்பணிகள்கட்டுவித்தான்- அ ப்பொழுது நடேசர் நமக்குக் கனகசபைகட்டுவித்ததுபோலத்தில்லைமூ வாயிரவர்களுக்கும் மூவாயிரங்கிரகங்கள்கட்டுவியுமெனக்கட்டளைகொ டுக்க அரசன் சபாநாயகர்சொற்படியே மூவாயிரங்கிரகங்கள் கட்டுவி த்து ஒவ்வொருகிரகங்களுக்குஆதிசைவப்பிராமணர் ஒவ்வொருவரைக் குடியேற்றுவித்து ஒருகிரகத்துக்காளில்லையென்றுசொல்ல அவர்களில் நாமும் ஒருகிரகத்துக்கு ஓராளாகவிருக்கின்றோமென்று- சுவாமி திரு வாய்மலர்ந்தருள அரசன்மனமகிழ்ந்தார் - சிவனடியார்களில் சுவாமி யும் ஓராளாவாராகில் தில்லைமூவாயிரவர் சிறப்பைச் சொல்ல யாரா லாகும்.



தில்லைவாழந்தணர்

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருநீலகண்டநாயனார் சரித்திரம்.

தில்லைநகர்வேட்கோவர் தூர்த்தராகித் தீண்டிலெமைத்திருநீலகண்டமென்று, சொல்லுமனையாட்டியையன்றிமற்றுந் தோகையிடையாரிடையின் பற்றுறந்துமூத்தவ், கொல்லையிலோடிரைவைத்துமாற்றிநாங்க ளொடுத்திலமென்றியம்புமெனவிழுந்துபொய்கை, மெல்லியலாருடன்மூழ்கி யிளமையெய்தி விளங்குபுலீச்சரத்தானைமேவினாரே.

தில்லைமூவாயிரவர் வாழ்திருக்குஞ் சிதம்பரத்தில், குயவர்குலத்தில் அவதரித்தவர், நற்குணமும், நற்செய்கையும், பத்தியும், அன்பும் உண்மையும், விவேகமும், தருமமும், பரமசிவனிடத்துச் சிந்தையும் விரதமாககொண்டவர், சிவனடியார்களுக்குத் திருத்தொண்டுசெய்பவர், திருநீலகண்டநாயனார் என்னுந் திருநாமமுடையவர், இவர் சிவபத்தர்களுக்குத் திருவோடும் அன்னவஸ்திரமுதலிய உதவியுஞ்செய்துவருநாளிலொருநாள் இந்நாயனார் அவ்வூரில் தேவதாசிவீட்டிற்போய்த் தனக்கிஷ்டமுள்ளவளிடத்தில் மனமகிழ்ந்து புணர்ந்து தமது வீட்டிற்குவந்ததை இவருடையமனைவியாராகிய- உத்தமபதிவிரதையார்கண்டு கோபத்தையுட்கொண்டு பிணங்கி வணங்கி இல்லறமுறைமை மாத்திரஞ்செய்து அவருடன் அநுபவிப்பதற்கு இஷ்டமில்லாதவரானார். திருநீலகண்டநாயனார் தம்முடையமனைவியார் பிணக்கைத்தீர்க்க அவர்சமீபத்திற்போனார்- மனைவியார் இனி என்னைத்தீண்டாதே தீண்டினால்; நம்முடைய பரமசிவனாகிய திருநீலகண்டத்தின்மேலாணையென்றுசொன்னார்.

அதைக்கேள்விப்பட்ட, திருநீலகண்டர் சிவனிடத் தன்புள்ளவராகையால் தன்மனைவியாரை அயலான் மனைவியைப்போலப் பார்த்துத் தாமும் வேறுபெண்களை யிச்சியாமலிருந்தார். அருந்ததி கற்புக்கொப்பாகிய மனைவியாரும் தாமும் புணர்ச்சியில்லாமல் இருவரும் வெவ்வேறிடத்திற் படுத்துப் பிறரறியாமல் வாழ்ந்திருந்தார்கள். இவ்வாறு யௌவனகாலங்கழிந்து விருத்தாப்பிய காலம்வந்தும், சபாநாயகரிடத்தில் அன்பகலாதவர்களாயிருக்கையில் பரமசிவன் ஒருபிராமண சிவயோகிவடிவமெ

**த்துக் கோவணமூத்துத் திருக்காத்திலே திருவோடேந்தித் திருநீறு புனைந்து திருநீலகண்டநாயனார் திருமனையில்வந்தார்.**

திருநீலகண்டர் சிவபத்தர்வந்தார் தரிசனைதந்தார் என்று துணிந்து பணிந்து சுவாமி உமக்கெளியேன் செய்யவேண்டிய குற்றேவ லென்ன வென்றுகேட்க - சிவயோகி திருநீலகண்டரே இந்தப்பாத்திரத்தைப் பத்திரப்படுத்தி. யான்கேட்கும்போது தருவாயாகவென்று தமதுகரத்திலிருந்த திருவோட்டைக் கொடுத்தார். அதைத் திருநீலகண்டர் வாங்கிக் கிரகத்துள்வைத்துச் சுவாமியிடத்தில்வரச் சிவபிராமணசாகவந்த சுவாமி உத்தரவு பெற்றுக்கொண்டுபோய்ச் சிலகாலஞ்சென்று சீலம்பொருந்திய குணந்திருந்திய திருநீலகண்டர் பெருமைவெளிப்படச் சுவாமிதிருவோட்டை மாயமாக்கிப் பழையவடிவமெடுத்துத் திருநீலகண்டர் திருமனைக்குள்வந்து திருநீலகண்டரே, யான்முன்கொடுத்த திருவோட்டைத்தாருமென்னத் திருநீலகண்டர் பாத்திரம் வைத்தவிடத்திற் போய்ப்பார்த்து அது அகப்படாமையால் கலங்கி ஏங்கிச் சிவபத்தரிடத்தில்வந்து என்னாண்டவரே தங்கள்திருவோடு வைத்தவிடத்தும் காணாமற்போயிற்று- அத்திருவோட்டிற்குப் பதிலோடு தருகிறேன் என்குற்றத்தை மன்னித்தருளுமென்றுசொல்லி வணங்கிநிற்க சிவயோகியாகிய பிராமணர் கோபித்து நீ பொன்னோடுகொடுத்தாலும் வாங்கேன், என்னோடுதாவென்றார். திருநீலகண்டர் போன ஓட்டுக்குப் பதிலானவோடுதருவேன் தருவேன் சுவாமி என்று,இணங்கிவணங்கிச்சொல்ல-சிவயோகி நீயென்பொருளைக் கவர்ந்துசாதித்தால் விடுவேனோ விடமாட்டேன் ஓடுகாணாமற்போன துன்மையானால் உன்னுடைய பிள்ளையைப்பிடித்துக் குளத்திலேமூழ்கி யானோட்டையெடுத்துக்கொள்ள வில்லையென்று சத்தியஞ்செய்யென்றார்.

அதற்கவர் சுவாமி எனக்குப்பிள்ளை யில்லையென்றார்,சுவாமி பிள்ளையில்லாவிடில் பெண்சாதி கையைப்பிடித்துத் தடாகத்தில்மூழ்கிச் சத்தியம்பண்ணென்றார் - திருநீலகண்டர் என்பெண்சாதியிடத்தில் நான்பேசுகிறதில்லை நானேமூழ்கிச் சொல்லுவேனென்ன - பிராமணவேடங்கொண்டசுவாமி திருநீலகண்டரே நீ என்பாத்திரத்தைக் கொடாமலுஞ் சத்தியஞ்செய்யாமலு மிருக்கிறபடியால் நான் தில்லைமூவாயிரவர் சபையிற் சொல்லுவேனென்றுசெல்லத் திருநீலகண்டரும் பின்சென்றார். சிவபத்தர் தில்லைவாழ்ந்தணர்சபையிற்போய்த் திருநீலகண்டர் திருவோட்டைக் கொடாதசெய்தியையும் அவர்பெண்சாதியுடன் சத்தியம்பண்ணமாட்டேனென்ற செய்தியையுஞ்சொன்னார். சபையார் திருநீலகண்டரைக் கேட்கத் திருநீலகண்டர் சுவாமி, திருவோடுகொடுத்ததுமெய் நான்வாங்கிவைத்ததுமெய் - அதுகாணாமற்போனதுமெய் என்றுசொல்ல - அப்படிமெ

யினாலும் சத்தியம்பண்ணலாமே யென்றார்கள். அதற்கவரிசைந்த சிவ யோகியை யழைத்துக்கொண்டு வீட்டிக்குவந்து, ஓடுமுங்கிற் றடியெடுத்து ஒருபக்கத்தைத்தான்பிடித்து மற்றொருபக்கத்தைப் பெண்சாதியைப் பிடிக்கச்செய்து திருப்புலீச்சரமென்னுந் தலத்தி னெதிரிலிருக்குங் குளத்தில் முழுகப்போகுந் திருநீலகண்டரையும் அவர்மனைவியாரையுஞ் சிவயோகிபார்த்து உம்முடையமனைவியார் கையைப்பிடித்து முழுகென்றுசொல்லத் திருநீலகண்டர் யாவருமறியும்படிக்கு ஆதிகாலமுதல் நடந்தசெய்தியெல்லாம் வரன்முறையாகத் தெரியச்சொல்லித் தடாகத்திலே முழுகினார்கள். ஸ்நானஞ்செய்துகரையேறிய, திருநீலகண்ட நாயனாரும் அவர்மனைவியாரும் விருத்தாப்பியபருவநீங்க - வாலிபப்பருவமடைந்தார்கள். தேவர்கள் பூமாரிபொழிந்தார்கள்- அங்கிருந்தசுவாமியும் அந்தரமாகப் பார்ப்பதிசமேதரா யெழுந்தருளியதைகண்டு யாவருமகிழ்ந்தார்கள் தேவரும்புகழ்ந்தார்கள் - திருநீலகண்டநாயனாரும் அவர்மனைவியாரும் சுவாமியை வந்தித்துச் சிந்தித்துநின்றார்கள். சுவாமியும் நீங்களிருவரும் இளமைப்பருவம் நீங்காமல் எம்மிடத்திருக்கக கடவீரென்று மறைந்தார். இருவருஞ் சுவாமியினுடைய திருவருளினாலே சிவபதவியைச்சேர்ந்து இளமைப்பருவத்தோடும் பேரின்பமடைந்தார்கள்,

திருச்சிற்றம்பலம்.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## இயற்பகைநாயனார் சரித்திரம்.



எழிலாருங்காவிரிப்பூம்பட்டினத்து ளியல்வணிகரியற்பகையா ரிருவர்தேட, வழலாயபிரான்றூர்த்தமறையோனாகி யாயிழையைதரவேண்டியணையவையன், கழலாரப்பணிந்துமனைக கற்பின்மேன்மைக காதலியைகொடுத்தமர்செய்கருத்தால்வந்த, பிழையாருஞ்சுற்றமெலாந்துணித்துமீளப் பின்னாகனாரழைத்தருளப்பெற்றாரே. ௧



சீர்வளம், நிலவளம், நகர்வளம்பொருந்திய காவிரிப்பூம் பட்டினத்தில் தனவைசியர்குலத்தில் அவதரித்தவராகிய இயற்பகைநாயனார் வேதங்களைச் சிலம்பாகத்தரித்த பாதங்களையுடைய பரமசிவனிடத் தன்பும

சிவனடியாரிடத்துப் பத்தியும் அகலாதிருப்பவர் -யார்வந்தெதைக்கேட்
கினும் அதையில்லையென்னாமல் அன்பாகவும், இன்பாகவும், கொடுக்குந்
தருமசிந்தையையுடையவர். இந்நாயனார் மனைவியாருடன் இல்லறமுறை
தவறாமல் வாழுநாளில் கைலாயபதியானவர் வாலிபமுடைய பிராம
ணராகத் திருவுருவெடுத்து எதுகேட்கினு மில்லையென்னாதுகொடுக்கும்
இயற்பகைநாயனாரிடத்திற்கு வந்தார் - இயற்பகைநாயனார் கபடவேடங்
கொண்ட சுவாமியைக்கண்டு எதிர்கொண்டு ஷோடசோபசாரமுஞ்செ
ய்து திருக்கரங்காட்டித் திருவாய்புதைத்து நிற்கையில் வந்தபிராமணர்
இயற்பகைநாயனாரே, நீர் எதைக்கேட்டாலுங் கொடுக்கிறீரென்ற வார்த்
தையைக்கேட்டு உம்மிடத்தில் ஒருபொருளைக்குறித்து வந்தேன், அதை
யில்லையென்னாது கொடுப்பீராகில் இன்னதென்று சொல்வேனென்றார்.
இயற்பகைநாயனார் சுவாமி தாங்களெதைக்கேட்கினும் அதைத் தடைய
ல்லாமலே தருவேன் திருவுளம்பற்றுங்களென்றார் பிராமணர் உமதுபெ
ண்சாதியின்மேலிச்சைவைத்தேன் நீரும் இச்சையாகத் தரவேண்டுமெ
ன்றுசொல்ல இயற்பகையார் அப்படியே சுவாமிசொற்படியே தேவரீர்க்
கென்மனைவியாளைக் கொடுக்கப் பாக்கியம்பெற்றேனென்று சொல்லித்
தன்மனைவியாரிடத்திற்போய்நின்று என்னுயிர்த்துணையாகிய மனைவியே,
நான் உன்னை இச்சிவபிராமணருக்குக் கொடுத்துவிட்டேன் நீ யிவர்பின்
போய் இவரிஷ்டப்படி நடவென்றுசொல்ல மனைவியார்கணவர்சொற்படி
நடக்கிறதே கற்பென்றெண்ணித் தன்னாயகனைவணங்கி வெளியில்வர
இயற்பகையாரும் மனைவியாரைப் பிராமணருக்கொப்பித்து வணங்கிநிற்
கப் பிராமணராகவந்த சுவாமி இந்தப்பெண்ணை நான் ஒன்றியாகக்கொண்
டுபோகிறபடியால் உம்முடைய உறவினர்களாலும் இவ்வூராராலும் எனக்
கிடையூறில்லாமல் நீர் எனக்குத்துணை வரவேண்டுமென்றார் அதற்கிய
ற்பகைநாயனார் உடன்பட்டுக் கேடகத்தையும்வாளையுங் கையிலெடுத்துக்
கொண்டு இருவரையு முன்னேபோகச்செய்து தாமவர்களுக்குத் துணை
யாகப் பின்னேபோனார், இதைக்கண்ட விருவகை மரபிலுள்ளவர்களும்
இயற்பகைநாயனார் பைத்தியம்பிடித்தவரானார், ஆகையால் பெண்சாதி
யைப் பிராமணனுக்குக் கொடுத்துவிட்டார், இவராலே நம்முடையகுல
த்திற்குப் பழுதுவந்ததென்றெண்ணி அம்மூவர்களையும் பிடிக்கத்தொட
ர்ந்தார்கள்.

இருவகைமரபிலுள்ளோரும் - வில்-வாள்-வேல், தண்டமுதலிய
ஆயுதங்களைக்கொண்டு வருகிறதைச் சுவாமியாகிய பிராமணர்பார்த்து இ
யற்பகைநாயனாரே, உன்னினத்தாரும் உன்மனைவியினத்தாரும் வருகின்றா
ர்களே, நானென்செய்வேனென்று பயப்பட, அதற்கு இயற்பகையார்

சுவாமி பயப்படவேண்டாமென்றளவில் இருவகைச்சுற்றத்தாரும் நெருங்கி ஓ பிராமணப்பரதேசியே, இயற்பகையாருக்குப் பைத்தியம்பிடித்தது உமக்கும் பைத்தியம்பிடித்ததோ எங்கள்குலப்பெண்ணை விட்டுப் போவென்றுசொல்லச் சுவாமியயர்ந்தவர்போல இயற்பகையார் மனைவியைப்பார்க்க, அவர்மனைவியார் ஆண்டவரேநீர்பயப்படவேண்டாம் இயற்பகையார் இவர்களைச் செயிப்பாரென்ன, இயற்பகையார் இவ்வார்த்தையைக்கேட்டுப் பந்துசனங்களைப்பார்த்து உறவினர்களே, நீங்களெல்லாரும்எங்கள்பின் வாராமலோடிப்பிழையுங்கள், நீங்கள் வருவீராகில் உங்களைவெட்டிக் கண்டதுண்டஞ் செய்வேனென்றார்

அதற்குறவினர்கள் என்னடா இயற்பகையே, குலத்துக்கடாதகாரியஞ்செய்தாய் பெண்சாதியைப் பிராமணனுக்குக் கொடுத்தாய் நாங்களிறந்தாலு மிறப்போமேயன்றி பெண்ணைப் பிராமணனிடத்தில் விடமாட்டோமென்று, பிராமணனைத்தடுத்தார்கள் இயற்பகையார் வாளாயுதத்தையுருவிச் சமீபத்தில் வந்தவர்களுடைய கரங்களையுஞ் சிரங்களையுந் தாள்களையுந் தோள்களையும் வெட்டித்துணித்து வாலிபராகவந்த பிராமணசுவாமியானவர், திருச்சாய்க்காடு என்னுந் தலம்வரைக்கும்போகத் துணையாகப்போய் வழிவிட்டு என்னாண்டவரே, இனி இப்பெண்ணை உம்முடைய வூர்க்கழைத்துக்கொண்டு போமென்று பிராமணனிடத்தில் விடைபெற்றுத் திரும்புகையில் பிராமணராகவந்த சுவாமியானவர் இயற்பகைநாயனாரே, முறையோமுறையோ வென்றழைத்தார் இயற்பகைநாயனாரும என்னையனே, இதோவந்தேன் வந்தேனென்று வாளையுருவிக்கொண்டுபோனார், சுவாமிமறைந்தார், இயற்பகையார்சுவாமியைக்காணாமல் மனைவியைமாத்திரங்கண்டார், கைலாயபதி இடபவாகனருடராகிப் பார்ப்பதிசமேதராயக் காக்ஷிகொடுத்தருளினபின், இயற்பகைநாயனாரே, நீரும் உம்முடைய கற்புள்ள மனைவியாரும் எம்முடைய கைலாயத்தில்வந்து எம்மைவிட்டகலாது வாழ்ந்திருங்களென்றுசொல்ல இருவரும் வந்தித்துச் சிந்தித்துச் சுவாமியுடன்போய்ச் சிவபதவியைப்பெற்றார்கள்-உறவினரும் சிவபதவியடைந்தார்கள்.

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# இளையான்குடிமாறநாயனார் சரித்திரம்.

---

மன்னியவேளாண்டொன்மைவிளங்கியமாறர் வறுமையா லுணவுமிக மறந்துறைவதி, புன்னருளளிருள்மழையிலுண்டி வேண்டி யும்பர்பிரானை யுவப்புறவமுதுவித்தனன், செந்நென்முளையமுதுமனைபலக்காலாக்கிச் சிறுபயிரின்கறியமுதாகிருந்தச்செய்து, பன்னலருமுணவருந்தப்பெழுந்த சோதிப் பரலோகமுழுதாண்டமாண்மையாரே. ௧

---

இளையான்குடியென்னும் பட்டினத்தில் சூத்திரர்குலத்திற்பிறந்தவர் மாறநாயனார், இவர் சிவபக்தியிலே சிலாக்கியமும், திரளானபாக்கியமும், சத்தியவாக்கியமும். சிறந்தயோக்கியமும், விரதமாகக்கொண்டவர், மேலும் சிவனடியார்களுக்கு அன்னமுஞ் சொர்ணமுங் கொடுக்கிறவர் பாலும் பாலுங் கொடுக்கிறவர் சிவபத்தர்களுக்கும், தவமுத்தர்களுக்கும், மனத்திருத்திசெய்து விருத்தியாய்க் குபேரனைப்போல் வாழுங்காலத்தில், சிதம்பரேசுரர் இவர்பத்தியின் சத்தியமறியும்படிக்கு நித்தியதரித்திரமுண்டாக்கினார். அதனால பாக்கியசாலியாயிருந்தவர் அபாக்கியரானார், ஆகியுஞ் செல்வமுள்ள காலம்போலவே சிவனடியார்களுக்கு விருப்பத்தின்படி வேண்டியவைகளைக்கொடுத்துக் கடன்பட்டு முடன்பட்டுக் கைப்பொருளற்றும் எப்பொருளையும் விற்றும் தளர்ச்சியில்லாது தருமஞ்செய்துவரும்போது, மாரிக்காலத்தில் பகல்முற்றும் பொசிப்புக்கிடையாமல் இராத்திரியிலே நித்திரையில்லாமல் கதவடைத்து இளையான் குடிமாறநாயனாரும் இவர் பத்தினியாரும் பசித்திருக்கையில் சுவாமி சிவபத்தர்போலத் திருவுருவெடுத்துத் தெருக்கதவைத்தட்டி யழைத்தார், இளையான்குடிமாறநாயனார் கதவைத்திறந்து கண்டு எதிர்கொண்டு வீட்டிலழைத்துச்சென்று, முன்னின்றுதொழுது மழையிலே நனைந்துவந்த, சிவனடியார் திருமேனியைத் துடைத்து அவரை ஓரிடத்திலெழுந்தருளச்செய்து மனைவியாரைப்பார்த்துச் சிவனடியார்பசித்துவந்திருக்கிறார் இவர்க்கமுது படைக்க வேண்டுமென்றுசொல்ல, அவர்மனைவியார்வீட்டிலொருபதார்த்தமுமில்லை கடன்கொடுப்பாருமில்லை, நம்முடையவயலில் விதைத்திருக்கிற முளைநெல்லைத் தேவரீர்வாரிக்கொண்டு வருவீராகில், அதைக்குத்தி அரிசியாக்கி அன்னஞ்சமைத்துச் சிவனடியாருக்கு அன்பாகப்

படைப்பேமென்றார், இதைக்கேள்விப்பட்ட இளையான் குடிமாறநாயனார் நெல்லின்முளையை வாரிக்கொண்டுவரப் பாதிராத்திரியில் வயலுக்குப்போம்பொழுதில பெருமழைபொழிய அம்மழையில்நனைந்து சிவபத்தனைநினைந்து கூடையைத் தலையிற்கவிழ்த்துக்கொண்டு அநுபவஞானத்தால் தம்முடையவயலைக்கண்டு தண்ணீரின்மேலே மிதந்தநெல்லைக் கையாற்கோலிவாரிக் கூடையிற்போட்டுச் சிரத்திற் சுமந்துகொண்டுவந்தார்.

இவர்வருகைக் கெதிர்பார்த்திருந்த மனைவியார், கூடைநெல்லைவாங்கிச் சேறுநீங்கக்கழுவி அடுப்பில் நெருப்பைமூட்டி விறகில்லையென்று சொல்ல இளையான்குடிமாறநாயனார் வீட்டின்மேற் கூரைவரிச்சுக்களை முறித்துக்கொடுக்க மனைவியார் அடுப்பில்வைத்து நெல்லைத்துக்களைப்பதமாகவறுத் தரிசியாக்கி அன்னஞ்சமைத்துக் கறியில்லையென்னக் கணவனார் நன்செய்க்குப்போய் வந்தவருத்தம்பாராது புன்செய்க்குப்போய்ச் சிறுபூம்பயிர் பிடுங்கிக்கொண்டுவந்து கொடுக்க, கற்புடைய மனைவியார் வாங்கிச் சட்டுவையிட்டுப் பலவகைக்கறிகளைச் சமைத்துத் தங்கணவர்க்குக்காண்பித்துச் சிவபத்தர்க் கமுதளிப்போமென்றுசொல்லக்,கணவனார் நித்திரைசெய்யுஞ் சிவனடியார்முன்போய்நின்று, அடியேனை யொருபொருளாக எண்ணிவந்தசுவாமி நித்திரைவிட்டெழுந்து பசியிளைப்புத் தீரும்படிக் கமுது செய்யுங்களென்றுசொல்லச், சிவனடியாராகத் திருவுருவெடுத்துவந்த சுவாமியானவர், உமையவள்சமேதராய் இடபவாகனரூடராய் எழுந்தருளிக் காட்சிகொடுத்து, இளையான் குடிமாறநாயனாரையும் அவர்மனைவியாரையும்பார்த்து, நீங்களிருவரும் நம்முடையகைலாயத்திற் கெழுந்தருளிக் குபேரனுங்களுக்கு ஏவற்பணிவிடைசெய்ய இன்பங்களை யநுபவித்திருங்களென்று, திருவருள்செய்தார். இருவரும்பரமசிவனைப்புகழ்ந்து மகிழ்ந்து துணிந்து பணிந்து பத்தியினால் முத்தி பெற்றார்கள்.

திருச்சிற்றம்பலம்.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## மெய்ப்பொருணாயனார் சரித்திரம்.



சேதியர்நற்கோவலூர்மலாடமன்னர் திருவேடமெய்ப்பொருளாத் தெளிந்தசிந்தை, நீதியினருடன்பொருதுதோற்றமாற்றா னொடுஞ்சினமுங்கொடும்பகைபுகழாவன்னை, மாதவர்போலொருமூலைகொண்டணுகி

னிற்குச்செல்லென்ன அரசிசென்றபின்பு அரசன்முத்தநாதனையாசனத்தில்வைத் தாகமப்பொருளை யருள்செய்யுமென்றார், அவன்புத்தகமவிழ்ப்பதுபோல மூட்டையையவிழ்த்து, ஒளித்துவைத்திருந்த உடைவாளையெடுத்து வணங்கிநின்ற மெய்ப்பொருணாயனாரைத் தானினைத்தபடி வெட்டினான், இராஜாவானவர் அவன்செய்தகுற்றத்திற்குப் பதில்குற்றஞ் செய்யாமலும் வையாமலும் வணங்கினார், தத்தனென்பவன் முத்தநாதனை வாளுருவி வெட்டப்போனபோது முன்வெட்டுப்பட்டுதிரஞ்சிந்தநின்ற மெய்ப்பொருணாயனார் நம்மையாட்கொள்ளவந்த சிவபத்தனைவெட்டாதேயென்று தடுத்துக் கீழேவிழுந்தார், விழுந்தவரசரைத் தன்கையாற்றாங்கி அடியேன்செய்யவேண்டுங் குற்றேவல்யாதென்றுகேட்க, அரசன்சிவபத்தனை யாவருந்துன்பப்படுத்தாமலிருக்கும்படி அவர்விட்டிற்கொண்டுபோய் விட்டுவாவென்றுசொல்லத் தத்தன் அவனை யழைத்துக்கொண்டுபோகையில் இராஜாவை யுடைவாளினாற்குத்திய முத்தநாதனைக்கொல்ல அரண்மனைக்காவற்காரர்கள் புறப்பட்டார்கள்.

தத்தன் எதிர்த்தவர்களையெல்லாம், தடுத்துச் சிவபத்தனைக்கொல்லக்கூடாதென்று அரசன் கட்டளையிட்டிருக்கிறாரென்ன வந்தவர்கள்விலகிப்போகத் தத்தன் சிவனடியாராகவந்தவனை யழைத்துக்கொண்டு பிழைத்துப்போம்படி பட்டணத்தைக் கடக்கவிட்டுவிட்டு மெய்ப்பொருணாயனாரிடத்துக்குவந்தான். வந்த தத்தனரசனைவணங்கி என்னாண்டவரே, உம்முடையகட்டளைப்படி சிவபத்தர்க்கிடையூறில்லாமல் விட்டுவந்தேன் என்றுசொல்ல, அரசன் தத்தனைப்பார்த்து எனக்கு நல்லுதவிசெய்தாயென்றுசொல்லி, அரசாளுதற்குத் தக்கபிள்ளைகளையழைத்துச் சிவசிந்தை மறவாதிருங்கள் திருநீற்றிலன்புவையுங்கள், சிவனடியாருக்குதவிசெய்யுங்கள்; என்று நடேசரைத் தியானம்பண்ணினார், தியானித்தபிரகாரம் பரமசிவனார்காட்சிகொடுத்துத் தம்முடைய திருவடித்தாமரைகளில் சேரும்படி நித்தியங்களிகூரும்படி திருவருள்செய்தார், மெய்ப்பொருணாயனார் அப்படியே சிவபதம்பெற்றார்

திருச்சிற்றம்பலம்.

---



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# விறன்மிண்டநாயனார் சரித்திரம்.



விளங்குதிருச்செங்குன்றூர்வேளாளன்றொன்மை விறன்மிண்டர் திருவாரூர்மேவுநாளில், வளங்குலவுதொண்டரடிவணங்காதேகும் வன்றொண்டன்புறகவனைவலியவாண்ட, துலங்குசடைமுடியோனும்புறகென்றன்பாற் சொல்லுதலுமவர்தொண்டத்தொகைமுன்பாட, வளங்குளிரவுளமதெனைறாதனுலவண்ண லுவகைதரவுயர்கணத்துமோங்கினாரே. 0



மலைநாட்டில் செங்குன்றூரிலிருக்கும் வேளாளகுலத்திற்பிறந்தவர் துன்மார்க்கமெல்லாந்துறந்தவர், நன்மார்க்கத்திற்சிறந்தவர், சிவநேசர்களிடத் தன்புகொண்டவர், தவமேபெரிதெனக்கண்டவர், விறன்மிண்டநாயனார் சாம்பசிவமூர்த்தி எழுந்தருளிய கோயில்களிலும் திருத்தொண்டரெழுந்தருளிய திருக்கூட்ட வாயில்களிலுஞ் சென்று நின்று அன்போடு வணங்குகின்றவர் இன்போடுதருமத்திற் கிணங்குகின்றவர் இவர்பலதலங்களையுங்கண்டு தரிசனைகொண்டு சோழதேசத்தைக்கடந்துநடந்து திருவாரூரில்வந்து தேவாசிரியமண்டபத்திற் றிருக்கூட்டத்தைவணங்கி யிணங்கித் திருக்கரத்திலேவாளேந்திக் காத்துநிற்குங்காலத்தில் சுந்தரமூர்த்திசுவாமிகள் தூர்த்தவேடமாய்வருகிறதை விறன்மிண்டநாயனார்கண்டு தேவாசிரிய மண்டபத்தின் றிருக்கூட்டத்தில்வந்து கலந்துகொள்ளாமல் ஒருவகையாகநினைத்து ஒதுங்கிப்போகின்றதைப்பார்த்து, சிவனுக்கும்புறம்பு சிவனடியாருக்கும் புறம்பென்றுசொல்லி உலகத்தார்மதிக்கவும் துதிக்கவும்பெருந்தன்மையடைந்து சைவசமயத்திலிருந்து திருநீற்றினையும் உருத்திராக்ஷத்தினையு மணிந்து சிவபத்தனைப்பணிந்து பரமசிவனது திருவடிநீழலிலே சிவகணங்களுக் கதிபதியாய் வாழ்ந்திருக்கும் பேறுபெற்றார்.

திருச்சிற்றம்பலம்.





உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அமர்நீதிநாயனார் சரித்திரம்.



பழையாறைவணிகரமர்நீதியார்பாற் பரவுசிறுமுனிவடிவாய்ப்பயிலு நல்லூர், குழைகாதர்வந்தொருகோவணத்தைவைத்துக் கொடுத்ததனையெடுத்தொளித்துக்குளித்துவந்து, தொழிலாருமதுவேண்டிவெகுண்டுநீரித் துலையிலிடுங்கோவணநேர் தூக்குமென்ன, வெழிலாரும்பொன்மனைவி யிளஞ்சேயேற்றி யேறினர்வானுலகுதொழவேற்றுரே. 0



சோழதேசத்தில் பழையாறைப்பதியில் வணிகர்குலத்தி லவதரித்தவர், அளவில்லாச்சம்பத்தைப்பெற்றவர், ஞானநூல்களெல்லாங் கற்றவர், நவமணிகள்முதலிய வியாபாரம்பண்ணுகிறவர் சிவதொண்டர்கள் பாதங்களைச் சிந்தையிலெண்ணுகிறவர் சிவன் றிருப் பாதங்களைப் பணிகிறவர், தருமஞ்செய்யத் துணிகிறவர், குறைவில்லாமல் வாழ்கின்றவர், பெரியோர்களைக்கண்டு தாழ்கின்றவர், அமர்நீதிநாயனுரென்னுந் திருநாமமுடையவர். இவர்திருத்தொண்டர்களுக்கு அன்னவஸ்திரமுதலிய வைகொடுத்து அவர்களைவழிவிடுத்து வாழுநாளிலே திருநல்லூரென்னுந்தலத்தில் கைலாயபதிக்குநடந்த திருவிழாவைக்கண்டு மகிழ்கொண்டுதோத்திரஞ்செய்து அவ்வூரிலே தமமாற்கட்டப்பட்ட மடத்திலே தாமுந் தம்மினத்தாரும் போய்ச்சேர்ந்து அடியார்களோடு களிகூர்ந்து யாவர்க்கும் அன்னதானஞ்செய்து மகிழ்ச்சியும் புகழ்ச்சியும் அடைந்திருக்கையில் திருநல்லூரிலெழுந்தருளிய பரமசிவனுர் பிராமணப்பிரமசாரி திருவுருவெடுத்துத் தருப்பையுந் திருநீற்றுப்பட்டையும் ஒரு தண்டின்மேற்கட்டிய விரண்டுகோவணமுங்கொண்டு அமர்நீதிநாயனுர் பத்தியைப்பரிசோதிக்க அவரிடத்தில்வந்தார், அமர்நீதிநாயனுர் பிரமசாரியாகவந்த சுவாமியைப்பார்த்து எதிர்சென்றுநின்று அன்போடுபணிந்து இன்போடுதுணிந்து வேதத்தின்முதலே, விற்பனக்கடலே, யான்செய்யுந்தவமே, யாவர்க்குஞ்சிவமே, தேவரீர் திருவடிகளை இங்கு நான்காணப்பெற்றது என்றுபத்தோர்செய்த புண்ணியந்தானென்று வந்தவரையுள்ளேயழைத்து விற்றிருக்கச்செய்தபின் பிராமணப்பிரமசாரியார் அமர்நீதிநாயனுரே, நீர் அன்னுள்ளவரென்றும் சிவபத்தரென்றும் திருத்தொண்டருக் கமுதளிப்பவரென்றும் கோவணமுதலிய வஸ்திரங்கள்கொடுப்பவரென்றும் கேள்விப்

பட்டும்மிடத்துவந்தோமென்றுசொல்ல அமர்நீதிநாயனார் சுவாமி, சுத்தம்பொருந்திய இம்மடத்திலே பிராமணர்கள் போசனம்பண்ணும்படிக்குப் பிராமணர்களே சமையல்செய்கிறது ஆகையால் தேவரீரும் இங்ஙனம் திருவமுது செய்யவேணுமென்றுவணங்க, பிரமசாரியார்சம்மதித்து நான்காவேரியில் ஸ்நானஞ்செய்து வருகிறேன் இந்தக் கோவணத்தைப் பதனப்படுத்திவைத்திருந்து நான்வந்தவுடனேதாருமென்று தண்டிற்கட்டியிருந்த ஒருகோவணத்தை யவிழ்த்துக்கொடுத்தார்.

அமர்நீதிநாயனார் வாங்கிவீட்டில்வைத்து ஆண்டவரே விரவில்நீராடிவாருமென்றார், சுவாமியுங்கொடுத்த கோவணத்தை மாயமாக்கிக் காவேரியிலே ஸ்நானஞ்செய்து மழையிலேநனைந்து மடத்திற்குவந்து அமர்நீதிநாயனாரைப்பார்த்துக் கோவணந்தாருமென்றார்.

அவர்போய்வைத்தவிடத்திற் பார்க்கக் கோவணமில்லாமையால் வீட்டுள்ள பலவிடங்களிலுந்தேடினார் தேடியுங்காணாமையால் வாடினார், அமர்நீதிநாயனார் கிழிபடாமல் நெய்யப்பட்ட கௌபீனமொன்றெடுத்துச் சுவாமியிடத்துவந்து என்னாண்டவரே தேவரீர் தந்தகோவணம் வைத்தவிடத்திற் காணாமற்போயிற்று வதில்கோவணங் கொண்டுவந்தேனதையவிழ்த்து இதைச்சார்த்திக்கொண்டு என்குற்றத்தை மன்னித்தருளவேண்டுமென்று வணங்கிநிற்கப் பிராமணர்கண்டு கோபங்கொண்டு அமர்நீதிநாயனாரே, உமதுதருமநன்றாகவிருக்கின்றது, இன்றுகொடுத்த கோவணத்தை மோசஞ்செய்தாய், சிவனடியார்களுக்குக் கோவணங்கொடுக்கிறேனென்று பேர்வைத்துக்கொண்டுவந்த பரதேசிகள்கோவணத்தைக் கிரகித்துக்கொள்ளுகிறாய், இதுநல்லபுண்ணியந்தான் என்றுசுவாமிசொல்ல அமர்நீதிநாயனார் நடுநடுங்கி அழுதுதொழுது சுவாமி, கோவணத்திற்குப் பதிலாகப் பட்டாடைகள் நவரத்தினங்கள் வெண்பொன்செம்பொன் இவைகளைத்தருகிறேன் ஏற்றுக்கொள்ளுமென்ன, ஓ, பத்தரே, நீர்கொடுக்கிறேனென்றுசொன்ன பொருள்களானாலு மற்றையெவையானாலு நாம் உம்மிடத்திற் கொடுத்துவைத்திருந்த கோவணத்திற்குச் சரியானகோவணமிது இந்தக்கோவணத்தினுடைய எடைக்குப் பதிலாகநிறுத்துக் கொடுக்கவேண்டுமென்றுசொல்ல, அமர்நீதிநாயனார் சம்மதித்து ஒருதராசு கொண்டுவந்துநாட்டச் சுவாமிதண்டிற்கட்டியிருந்த கோவணத்தை யொருதட்டில்வைக்க, அமர்நீதிநாயனார், மற்றொருதட்டிலே நெய்யப்பட்டுள்ள கோவணத்தைவைக்கச் சுவாமி தட்டுக்கீழேயிறங்க அமர்நீதிநாயனார்கண்டு தாந்தேடிய பட்டாடைகோவணங்களை, நவமணிகளை, வெள்ளி பொன், வெண்கலம், திரவியமுதலானவை யெல்லாம்வைத்துக் கோவணத்தினெடைக்குச் சரியாகாமையால் சுவாமி எளியேன் பொருளெல்லாமவை

த்துஞ் சரியாகவில்லை, யானும் என்மனைவியும் என்பிள்ளையும் தராசுத்த
ட்டில் ஏறுகிறோம் கட்டளையிட்டருளுமென்னச் சுவாமியுடன் பட்டேறு
ங்களென்றார்

அமர்நீதிநாயனாரு மவர்தேவியாரு மவர்பிள்ளையும் ஒருமனப்பட்
டுத் துலாக்கோலைவலம்வந்து திருநல்லூரிலெழுந்தருளிய பரமசிவனைத்
தொழுது. நாங்கள் சத்தியமாகச் சிவனுக்கும் சிவனடியார்களுக்கும் பத்
திசெய்துவருவதோமாகில் இக்கோவணத்தட்டெடைக்கு நாங்களேறியதட்
டுச் சரியாகநிற்கவேண்டுமென் றேறினார்கள், ஏறினவுடனே சுவாமிகோ
வணத்தடிற்குச் சரியாகச் சிவபத்தரேறிநின்ற தட்டுச்சரிநின்றது தேவரு
மலர்மாரிசொரிந்தார்கள். யாவரும் அமர்நீதிநாயனார் பத்தியைத்தெரிந்தா
ர்கள், சுவாமிபார்ப்பதி தேவியாரோடு வெள்ளையிடபத்திலேறிக் காக்ஷி
கொடுத்தார், தராசுத்தட்டே தேவவிமானமாகப் பத்தரைக்கைலாயத்திற்
கொண்டுசெல்ல மூவருந்துதித்துக்கொண்டு சுவாமி திருவடிகளைச் சேர்
தார்கள், இனத்தாருஞ் சிவபதவியடைந்தார்கள்.

திருச்சிற்றம்பலம்.

---

ஙு

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## எறிபத்தநாயனார் சரித்திரம்.

திருமருவுகருவூரானிலையார்சாற்றுஞ் சிவகாமியார்மலரைச்சிந்தியா
னை, யரனெறியோரெறிபத்தர்பாகரோடு மறவெறியவென்றுயிரு மகற்றி
னொன்று, புரவலனாகொடுத்தபடையன் பால்வாங்கிப் புரிந்தரிவான்புகவெ
ழுந்தபுனிதவாக்கால், கரியினுடன்விருந்தாருமெழுந்தார்தாமுங் கலைகா
தாதுகாவல்கைக்கொண்டாரே, 0

சோழதேசத்திலிருக்குங் கருவூரில் ஆநிலையென்னும் தேவாலயத்
தில், பரமசிவனைக்காலையுமாலையுஞ்சென்று தரிசனைசெயபவராகிய எறிப
த்தநாயனார் திருக்கரத்தில்மழுவாயுதம்பெற்றவர் சிவனடியார்களுக்கு ஆ
பத்துவந்தா லதைமுன் னின்றுதீர்க்கிறவர் அடியார்களைச் சிவனைப்போ
லப்பார்க்கிறவர், இந்நாயனார் சிவசந்நிதிக்கும் சிவனடியார்களும் திருத்தொ

ண்டுசெய்துவருங்காலத்தில் ஆநிலைத்சவத்திலெழுந்தருளியசுவாமிக்குச் சிவகாமியாண்டார் என்கின்றவொருவர், அத்தியந்தபத்தியுடனே அகமல ர்ந்து முகமலர்ந்து மலர்கொய்து பூக்கூடையிற்பெய்து திருமாலைகட்டிச் சுவாமி திருமுடிக்கும் திருவடிக்கும் சார்த்தவேண்டுமென்று வருகையில் கருவூர்ப்பட்டணத்தில் புகழ்ச்சோழருடைய பட்டவர்த்தன யானையானது மகாநவமிக்கு முன்னாளையிலே திருவிழாநடக்கும்வேளையிலே காவேரியிலேநீராடிக் கடுவேகமாகவோடி மதமீறிப்போம்போது தனக்குமுன்னேபோகிற சிவகாமியாண்டாரைசகண்டு அடர்ந்து தொடர்ந்து அவர்திருகையிலிருக்கும் திருப்பூக்கூடையைப பறித்துமுறித்துச் சிதறும்படியடித்தது,

சிவகாமியாண்டார் அதைக்கண்டுகோபித்துச் சாபித்து அடிக்கப் பிடிக்கத்தொடங்கினர். இவர்விருத்தாப்பியரானபடியால் ஓடுதற்குச்சத்தியில்லாமல் கீழேவிழுந்து எழுந்து சிவனைக்குறித்துச் சிவபெருமானே, தெவிட்டாததேனே, கருணாநிதியே, கைலாயபதியே, கற்பகத்தருவே, காணருமுருவே, எளியனைக்காக்கவேண்டும் கிருபைக்கண்ணோக்கவேண்டும் என்று சிவகாமியாண்டார் முறையமிட்டவார்த்தையை எறிபத்தநாயனார்கேட்டுச் சுவாமி உம்முடையமனதிற்கு வருத்தஞ்செய்தயானையை கொன்று கீழேதள்ளுவேனென்று மழுவாயுதத்தையெடுத்துவந்து முன்னிற்கச் சிவகாமியாண்டார் எறிபத்தநாயனாரோ மதங்கொண்டயானைப் பூவைப்பிடுங்கிச் சிதறி யிவ்வீதியிற்போயிற்றென்றுசொல்ல எறிபத்தநாயனார் யானையைப்பிடிப்பேன் மடிப்பேன் என்றுசீறிமீறி யானையைக்கிட்டினர். மழுவாயுதத்தால் அதன்துதிக்கையைவெட்டினர்,

வெட்டுப்பட்டயானை மலைபோலச்சாய்ந்தது சாய்ந்துமாய்ந்தது யானைப்பாகரிருவரையும் யானைப்பக்கத்தில்வந்த குத்துக்கோற்காரர் மூவரையும் போரில்வென்றார் வென்றுங்கொன்றார் இதைக்கண்டவர்கள் புகழ்ச்சோழருடைய அரண்மனை வாயிலாளரிடத்திற்சென்று உங்களரசனுடைய பட்டவர்த்தன யானையையும், பாகரோடைவரையும், ஒருவன் கொன்றானென்றுசொல்லக் காவலாளர்கேட்டுச் சோழராசனுக கறிவிக்கப் புகழ்ச்சோழர் இச்செய்தியையறிந்து கோபம்பதைக்க யானையைக் கொன்றவர்களைச் சிதைக்க அரண்மனையைவிட்டுப் புறப்பட்டவளவில் சதுரங்கசேனைகளும் அரசனைச்சூழ்ந்து தாழ்ந்து அஸ்திரசஸ்திரங்களுடனே முன்னும் பின்னும்போக வாத்தியங்கள்முழங்கப் படைகள் வெற்றிச்சதமுழங்க இராஜனவர் யானையிறந்த போர்க்களத்தில் வந்து மனமொத்து எறிபத்தநாயனாரைப்பார்த்து யானையைக்கொன் வளர்யாறகர்

னைக்கேட்க, அங்கிருந்தயானைப்பாகர் எங்களாண்டவரே இங்குநின்ற எறிபத்தநாயனாரே கொன்றாரென்றார்கள.

அரசன் குதிரையைவிட்டிறங்கி இச்சிவபத்தர்க்கு யானையெல்லது ற்றஞ்செய்ததோ, அதனும் கொன்றொன்றெண்ணிச் சதுரங்கசேனைகளையும் விலகப்பண்ணி இறங்கி வணங்கி மதித்துத் துதித்துநின்று எறிபத்தநாயனாரே, யானைசெய்தகுற்றந் தீரவிட்டாலும் தங்கள் கோபமாறவிட்டாலும் எளியனைவதையுங்கள் சிதையுங்கள் என்றுசொல்லி நிற்கையில் எறிபத்தநாயனார் புகழ்ச்சோழரே உம்முடையயானையானது சிவகாமியாண்டாரென்கின்ற சிவபத்தர் திருப்பூமாலைக் கூடையைப்பிடுங்கிச் சிதறப்பண்ணியது. அதனால் பரமசிவனாருக்குப் பூசைவேளைக்குத்திருமாலையில்லாமற்போயிற்று இக்கொடியவினைசெய்தயானையை நானேகொன்றேனென்றார் புகழ்ச்சோழர் எறிபத்தரைநோக்கி எனதாண்டவரே, யானைசெய்தகுற்றத்திற்கு யானையும்பாகரும் இறந்ததுபோதாது, நானுமக்குற்றத்திற்குப் பலியானால் ஒப்பாயிருக்குமென்றுசொல்லித் தம்முடைய உடைவாளைஉருவி எறிபத்தர்க்கையிற்கொடுக்க, எறிபத்தநாயனார். அரசர்பத்தியும் யுத்தியுங்கண்டுகொண்டு தமது உயிரைவிடுவிக்க வாளைவாங்கி ஓங்கித் தன்கழுத்திலவைக்க, அரசர் எறிபத்தர்கைவாளோடுபிடிக்க எறிபத்தநாயனார், அரசர்திருவடிகளைத் தமதுமுடியில்வைத்து, வணங்கிப்பணிய அரசரும் எறிபத்தநாயனார் திருவடிகளைத் திருமுடியிலிணங்கிப்பணியப் பரமசிவனார் திருவுள்ளத்தறிந்து அவர்திருவருளால், ஆகாயத்தில் அசரீரிவாக்கொன்று பிறந்தது.

உடனேபாகரோடு யானையுமெழுந்தது எறிபத்தநாயனார் புகழ்ச்சோழனைப்பார்த்தார், அப்பொழுது தேவர்கள்பூமாரிபொழிந்தார்கள் இருவரும் அசரீரிவாக்கைத் துதித்தார்கள் சிவகாமியாண்டாருடைய திருப்பூக்குடலையில் மலர்கள்நிறைந்தன, அதுகண்டு சிவகாமியாண்டாருந் துதித்துநின்றார்.

பாகர்கள் யானையைநடத்திப் புகழ்ச்சோழரிடத்தில் வந்தார்கள். எறிபத்தநாயனார், புகழ்ச்சோழரை யானையின்மேலேறென்ன அரசரேறி யரண்மனைச்சென்றார் சிவகாமியாண்டாரும் போய்விட்டார், எறிபத்தநாயனார், சிலகாலஞ் சிவனடியாருக்குத் திருத்தொண்டுசெய்திருந்து பின்பு கைலாயஞ்சேர்ந்து,பிறவித்துன்பந்தீர்ந்து சிவகணங்களுக்குத்தலைவராக விற்றிருக்கும் பேறுபெற்றார்,

திருச்சிற்றம்பலம்.

—0—





சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ஏனாதிநாயனார் சரித்திரம்.



ஈழக்குலச்சான்றாரெயினனூர்வா ழேனாதிநாதனாரிறைவனீற்றைத்,
தாழக்கொழுமபார்படைகளாற்றுந் தன்மைபெறுவாரிசூரன்சமரிற்றோற்
று, வாழத்திருநீறுசாதகக்கண்டு மருண்டார்தெருண்டார்கைவாள்விடார்
ரேர், வீழக்களிப்பார்போனின்றேயாக்கை விடுவித்தார்சிவனருளே மே
வினரோ. 0



புலிக்கொடியும், வெண்குடையும், ஆத்திமாலையுமுடைய சோழராசாக்கள் அரசாளும் சோளதேயத்தில் எயினனூரில் ஈழக்குலத்திலவதரித்தவர், ஈழந்துறைகண்டவர், வாதவித்தைக்குரியவர், சான்றோரான ஏனாதிநாயனார் திருத்தொண்டிற்சிறந்தவர், வாள்வித்தையில்வல்லவா, சிவனடியாருக்குதவிசெய்பவர், அத்திரசத்திர வாளாயுதவித்தையை அரசர்முதலிய யாவர்க்குங்கறபித்தருளி அதனால் சீவனஞ்செய்பவர், சத்துருக்களும்புகழும்படி வாழ்கின்றகாலத்தில் தம்முடையதொழிலில் பங்குபெற்றுக்கொள்ளுந் தாயாதிமரபில்பிறந்தவனாகிய அதிசூரனென்பவன் வாள்வித்தையில் வல்லவனென்றும் தனக்குநிகரானவருலகத்திலில்லையென்றும் தன்னைமதித்துக் கெருவங்கொண்டு தன்னுடையதொழிலினது வரவு சுருக்கமாக ஏனாதிநாயனாருக்கே பெருக்கமாகககண்டு பொறாமையடைந்து தன்னினத்தாரோடு ஆலோசனைசெய்து ஏனாதிநாயனாரிடத்தும் போர்செய்யத்துணிந்து, தலைக்கடையினின்று அவரைப்போருக்கழைக்க ஏனாதிநாயனார் சகலஆயுதங்களோடு யுத்தத்திற்குப் புறப்பட்டார்.

அதிசூரன் அவரோடுசண்டைசெய்து தன்சேனைகளையிழந்து தானுந் தோற்றோடிப்போனான். ஏனாதிநாயனார் தோற்றவன் காணியாட்சியைக் கைக்கொண்டு சிவதொண்டுசெய்து வாழுநாளையில் அதிசூரன் ஏனாதிநாயனாரைப் போரில்வெல்வது தன்னாலாகாதென்றும் உண்மையாகப் போர்செய்யப்போகாதென்றும், வஞ்சகநெஞ்சங்கொண்டு திருமேனியெங்குந் திருவெண்ணீறுபூசிக்கேடகத்தால்மறைத்து ஏனாதிநாயனாரைப்

பொதுவிடத்திற் போருக்குவரவழைத்து அதிகாலையில் இருவரும் வாளுங்கேடகமுங் கொண்டு எதிர்த்துப் போகையில் அதிசூரன்மேலே போர்த்திருந்த போர்வையைவாங்கிச் சிவனடியார்வேடங்கொண்டுநின்றான், ஏனாதிநாயனார்பார்த்துச் சிவனடியாரைக் கொல்வது தருமமல்லவென்று கைவாளையுங்கேடகத்தையும் விட்டுநின்றார். அதிசூரன் தானினைத்தபடி தன்கைவாளால் ஏனாதிநாயனாரை வெட்டினான், கைலாயபதி காட்சிகொடுத்து ஏனாதிநாயனாரைச் சிவலோகத்திலேசாரூபபதவியை யடையும்படி திருவருள்செய்தார்.

திருச்சிற்றம்பலம்.



௨

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## கண்ணப்பநாயனார் சரித்திரம்.

⁕

வேடர்தியதியுடுப்பூர்வேந்தனாகன் விளங்கியசெய் தின்னனார்கன்னிவேட்டைக் காட்டில்வாய்மஞ்சனமுங் குஞ்சிதருமலருங்காய்ச்சினமென்றிட்டதசையுங்காளத்தியார்க்குதவ, தொருமென்பனிலாறுதினத்தளவுமளிப்பச்சிறு சிவகோசரியு தெளியவிழிப்புண்ணீர், ரோடவொருகண்ணப்பியொருகண்ணப்ப வொழிக வென்று மருள்கொடுகுருபரின்றாரே.

---

சிலந்தி பாம்பு யானை இவைகளாற் பூசிக்கப்பட்ட திருக்காளத்தி தலத்தில் உடுப்பூரென்னுமூரில், வேடர்குலத்தில் அதிபதியாகிய நாகனென்பவன் எல்லாமிருகங்களையுங் கொல்பவன், வில்வித்தையில் யாவரையும்வெல்பவன், தீவழியிற்செல்பவன், கொடுஞ்சொல்சொல்பவன், இவன் மனைவி தத்தையென்பவள் இவர்களிருவரும் பிள்ளையில்லாமையால், சுப்பிரமணியர்கோயிலுக்குப்போய் பிள்ளைவேண்டுமென்று துதித்துக்கொண்டிருந்தார்கள், சுப்பிரமணியர் இவர்கள் செபத்தையுந் தபத்தையுங்கண்டுகளிகொண்டு வேடர்குலம்விளங்க ஒருபுத்திரனைத்தந்தையாருக்கருளிச்செய்தார். அவர்திருவயிற்றி லொருகுழந்தைபிறந்தது- நாகன் குழந்தையையெடுத்து முத்தங்கொடுத்துப்பாடினான். ஆனந்தக்கூத்தாடினான். வேடர்கள்பிள்ளைகளைத் தின்னனென் றென்று நாமகரணஞ்செ

ட்டினார்கள்: பலவகையாபரணங்களும் பூட்டினார்கள். பூசனைக்குத்தக்க வாசனைமலர்களைச் சுப்பிரமணியருக்கணிந்து பணிந்தார்கள்.

பிள்ளை பிறைபோலவளர்ந்துவருகையில் வேடுவர்குலம்பெருகையில் குழந்தைபுலிவாயிற்கையைநீட்ட, நாகன் தழைகொண்டு இனியிப்படிச் செய்யாதேயென றடிக்கப பிள்ளை தண்ணீர்போலக் கண்ணீர்விட்டழத்தாய்துடைத்துவளர்க்கும்போது பிள்ளைபலகுறும்புசெய்துகாட்டிற்புகுந்து மிருகங்களையோட்டிக் கூட்டிப்பிடித்தடித்து வெட்டிக்கட்டிக்கொண்டுவரும். அதுகண்டு தாய்தகப்பன்மார் மகிழ்ந்து புகழ்ந்துகொண்டார்கள். நாகனும் திண்ணப்பனென்னுங் கண்ணப்பருக்கு வில்வித்தையாரம்பமென்று தன்னினத்திற்கு மற்றைச்சனத்திற்கு மானனுபவிக்க இனசனங்கள்வந்தார்கள். கனதனங்களைத் தந்தார்கள். நாகன்வீட்டில்பசித்தார்கள் யாவருந்தேனுந்தினைமாவும் புசித்தார்கள். வாத்தியமுழங்கினார்கள், நவமணிகளைத் தானம்வழங்கினார்கள். ஆயுதவித்தையைக் கண்ணப்பசுவாமிக்குப் படிப்பித்தார்கள். வில்லம்புகளைப்பிடித்தார்கள். கண்ணப்பர் தனுர்வேதத்தை ஆசிரியரிடத்துப்பெற்று வித்திப்படிகற்று. அதில்பயிற்சியு முயற்சியுமடைந்தார்

நாகன் பலமலைகளிற் சிலையெடுத்துவேட்டையாடிக் காட்டைக்காத்துவருநாளி லொருநாள். வேடர்களெல்லாருஞ்சேர்ந்து கனிகூர்ந்து தங்கள்குலத்துக் கதிபதியாகிய நாகராசனிடத்தில்வந்து எங்களாண்டவனே, நமதுடையகுறிச்சிகளில், யானை - யாளி - சிங்கம் - புலி - பன்றி- காடிகடமை - மான் - காட்டெருமை - முதலிய மிருகங்கள் பலவையழிக்கின்றன அவைகளைப்பிடிக்கவுமடிக்கவும் அம்பெய்யவும் உயிர்க்கொலைசெய்யவும் வேட்டைக்கெழுந்தருளுஞ்சுவாமியென்று சொன்னபோது நாகன் என்குலவேடர்களே குறிச்சிநாடர்களே எனக்கு வல்லமையில்லாமையாலும், மலையாளுகைக்குப்புதிசெல்லாமையாலும்வாலிபமானது இல்லாமையாலும்விருத்தவயதினால் யாதொன்றையுங்கொல்லாமையாலும் என் அரியதிருமகனாகிய திண்ணனை உங்களுக்கு இராசனாகப்பட்டங்கட்டுவிக்கிறேன் அவனைக்கொண்டு மிருகங்களை வெட்டுவிக்கிறேன், நீங்கள்யாவரும் அவன்கட்டளைப்படி நில்லுங்கள் அவனையே துணைகொண்டுசெல்லுங்கள் என்றுசொல்லிக் குறத்தியை அழைத்துக்குறிகேட்டுத திண்ணனைமலையாளுகைக்கு இராசனாக்கிமகனை நோக்கி அப்பாமகனே என்குலக்கொழுந்தே தப்பாமல் அரசாளென்று வாழ்த்துகிறேன். கண்ணப்பசுவாமிபிதாவினுடைய பாதாரவிந்தங்களை மனதாரநினைத்து வாக்காற்றுதித்துக்காலத்தாழ்பணிந்து தேவர்திருவாக்குக்கு எதிர்வாக்கில்லாமல் நடப்பேனென்றார்.

நாகன் பட்டணத்துக்குரிய உடைவாளையும் தோலுடையையுங்கொடுக்கத் திண்ணனென்னுங் கண்ணப்பசுவாமிபெற்று உதயகாலையில் அத்திரசாலையிற் சென்றுநின்று ஆயுதங்களையெடுத்து அரையிற்றொடுத்து வேடருடன்கூடி மிருகங்களைத்தேடிவேட்டையாடப்போயினார் திண்ணப்பநாயனாரும் வேட்டைக்காரரும்பற்பலமிருகங்களைக் கண்டதுண்டமாப்பண்ணிப் பிணக்குவியலாகக் குவித்தார்கள். கணக்கில்லாமல்வித்தார்களை வேட்டையிலிளைத்துங் களைத்தும வேடர்கள் பலதிக்கிலுமோடினார்கள் மிருககூட்டங்களைத்தேடினார்கள் - தேடுகையில் கண்ணப்பசுவாமிகளுக்குமுன்னே ஒருபன்றிவந்தது அதை அம்பால்நோக்கத அப்பன்றியைத்தொடர்ந்து கண்ணப்பர்செல்லும்போது யாவருமவழிதெரியாமற் பின்தொடர்ந்தார்கள் நாணனும் காடனும் அவர்நடந்த திருவடிக்குறிகளைத் தெரிந்தார்கள்.

பன்றியும் நெருக்கத்தில் ஒருமரத்தினடியிலே நின்றது கண்ணப்பர் அதை உடைவாளினாற்குத்தினார். நாணன்கண்டு காடனே சுவாமிகுத்தியபன்றி யாச்சரியமுடையதென்றான். இருவரும சுவாமிபசி மிகவுண்டாயிருக்கிறது, இப்பன்றியைச்சுட்டுப்புசித்துத் தாகந்தீரத் தண்ணீர்குடிக்கப் போவோமென்றார்கள். கண்ணப்பர் தண்ணீரெங்குண்டென்றார் நாணன் இம்மலைப்பக்கத்தில் பொன்முகலியாறுஇருக்கிறதென்ன - கண்ணப்பர் பன்றியையெடுத்துக்கொண்டு வாருங்களென்று ஆற்றிற்சேர்ந்து, காடா இப்பன்றியைச்சுட்டுவைத்திரு-நாணும்- நாணனும் இம்மலையில் சுவாமியைக்கண்டு தரிசித்து வருகிறோமென்று போய-காளத்திமலையடிவாரத்திற்சேர்ந்துமகிழ்கூர்ந்து உள்ளமுருகி அன்புபெருகி மலையின்மேலேறி முதற்கடவுளாகிய சுவாமியைக்கண்டு திருமேனியையணைத்து இருகையாலுமணைத்துக் கண்ணீர்விட்டழுதார் பலதரமுந்தொழுதார். பின்பு நாணனைப்பார்த்து நாணா, சுவாமிக்குநீர்வார்த்து மலர்சோத்துப் பூசித்தவர்யாரென்ன அவன்முற்காலத்திலுமது பிதாவோடு நாங்கள்வருகையில் ஒருபிராமணன் இப்படிச்செய்தானென்றான் திண்ணனார் தாமுமப்படிபூசிக்க யோசிக்கலானார், மேலுங்குடுமித்தேவராகிய சுவாமியைக்குறித்து எனதுதெய்வமே, ஐயோ, இக்காட்டிலேதனித்திருக்கிறீரோ, உமக்கிறைச்சிமுதலிய உணவு கொடுப்பாரில்லையேயென்று அன்பாலுருகி இறைச்சிகொண்டுவர விரும்புவார். சற்றுத்தூரம்போய் திரும்புவார் - சுவாமியைக்கட்டிக்கொள்ளுவார் - பசித்திருக்கின்றீரென்று துள்ளுவார்- பலதரமழுவார்-சிலதரந்தொழுவார் வலம்வந்துவிழுவார் அலமந்தெழுவார் - உணவுதரச்செல்லுவார் சுவாமி இதோவருவேன் வருவேன் போசனந்தருவேன் தருவேனென்றுபன்றியிடத்திற்சென்று நிற்கையில் காடன் நாணனைநோக்கி இங்கோரதா

மதமென்னவென்றான், நாணன் திண்ணனார் கடவுளுக்கடிமையானாரென்று சொல்லுகின்றான்.

காடன் திண்ணரே என்னசெய்துவிட்டீர் - என் பயித்தியங்கொண்டீர் என்றதைக்கேளாமல் திண்ணனார் பன்றியிறைச்சியையரிந்து நல்லதைத்தெரிந்து அம்பிலேகோத்து நெருப்பிற்காய்த்து வெந்தபதங்கண்டு உட்கொண்டு உருசிபார்த்துத்தீர்த்துக் கல்லில்வைத்து அதிலிறைச்சியைவைத்து, மற்ற இறைச்சிகளைச் சிதறியுதறி வேடரைத்துறந்து மறந்து சுவாமிக்குத் திருமஞ்சனமாட்டப் பொன்முகலியாற்றின் சலத்தைக்கண்டு வாயினுட்கொண்டு புட்பங்களெடுத்துத் தமதுதலைமயிரிலேதொடுத்து ஆற்றைநீங்கித் திருக்காளத்திமலையிற்சேர்ந்தார்.

காடனு நாடனுந் திண்ணனார் வெறிகொண்டார் இனிநம்மை யண்டாரென்று இச்செய்தியை நாகராசனுக் கறிவித்துத் தேவராட்டியைக்கொண்டு வைத்தியதைப் போக்குவோமென வேடர்களியாவரும்போனார்கள். இதுநிற்கத் திண்ணனார் காளத்திநாதனைப்பார்த்துச் சேர்த்தணைத்துக்கொண்டு சிவகோசரியாரென்னும் பிராமணரால் சார்த்தப்பட்டமலர்களைத் தமது செருப்புக்காலாலே கீழேவிழத்தள்ளி வாயில்வைத்திருந்த நீரை அபிஷேகமாட்டினார் தமதுகாத்திலிருந்த மலர்களைத் திருமுடிக்குச்சூட்டினார்-கல்லிலிலவைத்தமாமிச நல்லதெனக்காட்டினார். அன்புடன் திருவாய்க்கூட்டினார் பகற்காலம்போயிற்று-இராக்காலமாயிற்று - திண்ணனார் சுவாமியருகில் மிருகங்கள் கிட்டாமலும் வரவொட்டாமலும் வில்லேந்தாங்கி உடைவாளையோங்கிநின்றார். கண்ணப்பராகிய திண்ணனார் - விடியற்காலையில் அடர்ந்தசோலையில்சுவாமிக்கு உணவின்பொருட்டு வேட்டைக்குச்சென்றார். சிவகோசரியார் சுவாமிசந்நிதிக்கு முன்மலர்முதலியன கொண்டுவந்துநின்றார் - அவர் சுவாமிக்குமுன் என்புமாமிசமுமிருக்கக்கண்டு அன்புகொண்டு யாரிப்படிச்செய்தாரென்றலைவதா - இவரவ்விடத்தில் அசுத்தங்களைநீக்கிச் சுத்தங்களாக்கிப் பொன்முகலியாற்றில் ஸ்நானஞ்செய்து நன்மலர் கொய்து சுவாமிக்குத்திருமஞ்சனமாட்டி நன்மலர்சூட்டி விதிப்படிபூசைமுடித்துச் சிவகோசரிமாமுனிவர் போய்விட்டார். திண்ணனார் வனவேட்டையாடி இறைச்சிகளைத்தேடிப் பாகமாக அமைத்துச் சமைத்துச் சுவாமிக்கு முன்போலப் பூசைபண்ணி அன்பாகவெண்ணிப் படைத்துநின்றார். காளத்திநாதரும் அன்பாகத்தின்றார். இப்படி ஆறுநாள் கண்ணப்பர் செய்துவருகையில் சிவகோசரியார் வந்து சுவாமி - இனியிப்படிச் செய்தால் மனமெப்படிப் பொருந்துமெனக் குறையோடு முறையிட்டுப்போக அவர்கனவில் காளத்திநாதர் எழுந்தருளிச் சிவகோசரியாரே திண்ணனென்றொருபத்தன் என்னிடத் தன்

புள்ளவன் என்முடியிற்பூவை அவனடியினுற்றள்ளுகிறது சுப்பிரமணியர் மார்புமேலுந்தோள்மேலும் விளையாடுகிறத்திலுமிகுந்த சுகமாகவிருக்கின்றது. அவன்வாயாற்கொணர்ந்துவிடுந் தண்ணீர் ஆகாயகங்கையைப் பார்க்கிலு மதிகமாகவிருக்கின்றது, அவன் மென்றுதின்று படைத்தமாமிசம் இருடிகள்யாகப்பலியைப்பார்க்கிலு மேலாகவிருக்கின்றது-அவனன்பினைச்சொல்லச் சேடன்தன்னாலு முடியாது. நீ கண்ணப்பனாகிய திண்ணனன்செய்யுங் கிருத்தியங்களைச் செடிமறைவிலிருந்துபார்ப்பாயாக உனதுசந்தேகந் தீர்ப்பாயாகவென்று திருவருள் செய்தார்.

சுவாமி திருவாக்கின்படி சிவகோசரியார் மறுநாள்காலையில் ஆசையோடு பூசைமுடித்துச் செடிமறைவி லொளித்திருக்கையில் திண்ணனார் வேட்டையாடி வாய்க்கினியவிறைச்சிகளை இதம்பதஞ்செய்து காலையிற்பெய்து சிவலிங்கத்தின்முன் வந்துநின்றார். அப்பொழுது சுவாமி சிவகோசரிமுனிவர்க்குக் கண்ணப்பர்சுவாமி யன்பினைக்காட்டும்பொருட்டுத் தமதுதிருக்கண்களில் ஒருகண்ணில உதிரஞ்சொரியக்காணப்பட்டார், இதைக் கண்ணப்பர்கண்டு சுவாமிக்கிப்படிச்செய்தவர் யாரென்று கரங்களைமுறித்து நெறித்துப் பல்லைக்கடித்துக் துடித்துக் கீழேவிழுந்து எழுந்து உருண்டுபிரண்டு துக்கித்து வேடர்களிப்படிச் செய்தார்களோ மிருகங்களிப்படிச்செய்தனவோவென்று திக்கெட்டுமோடித்தேடி யொருவருமகப்படாமையால் சுவாமியருகில்வந்து இருதயநொந்து கண்ணிலிருந்து வருமுதிரத்தைத்தொடைத்தார், பலமருந்து தேடிப்பார்த்துவார்த்தும் உதிரநிற்கவில்லை ஐயோ. இதென்ன தொல்லையென்று சொல்லி ஊனுக்கூனே மருந்தாமெனத் தன்கண்ணைப் பேர்த்துச் சார்த்துவேனென்று தமதுகையிலிருந்த அம்பினாலே ஒற்றைக்கண்ணைச்சாத்தினார்.

சுவாமி ஒற்றைக்கண்ணிலு முதிரஞ்சொரியக்காட்டினார். அதுகண்டு திண்ணனார் பெருமகிழ்ச்சியுடனே தன்னிடக்காலைச் சுவாமிக்குப் புண்ணுள்ள கண்ணிற்குறியாகவைத்து - மற்றொருகண்ணையும் அப்பாற்பிடுங்கும்போது திருக்காளத்திநாதர் திருவாக்குக் கண்ணப்பா-கண்ணைப்பிடுங்காதேயென்று பிறந்தது. பின்பு கண்ணப்பசுவாமி திருக்கரங்களைப் பிடித்துக்கொண்டு கண்ணப்பா எனதுவலப்புறத்தி லிருப்பாயாகவென்று காக்ஷிகொடுத்தருளினார்- சிவகோசிரியார் மகிழ்ச்சியாகப் பார்த்திருந்தார் - தேவரும் பூமாரிபெய்தார்கள். யாவருந்துதிசெய்தார்கள்.

திருச்சிற்றம்பலம்.



சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# குங்கிலியக்கலயநாயனார் சரித்திரம்.

சீலமலிதிருக்கடவூர்கலயனாராந் திகழ்மறையோர் பணிவறுமைசி றையாமுன்னே - தாலியைநெற்கொளவென்று வாங்கிக்கொண்டு சந்தையில்குங்கிலியத்தாற் சார்ந்தசெல்வர்-ஞாலநிகழ்திருப்பனந்தாணாதர்நேரோ நரபதியுந்தொழக்கச்சாணயந்துபோதப்-பாலமுதமுண்டாருமரகமெய்கிப் பரிந்தமுதுசெயவருள்சேர் பான்மையாரோ.

சோழதேயத்தில் திருககடவூரென்னுந்தலத்தில் பிராமணகுலத்திற்பிறந்தவர் வேதத்தில்சிறந்தவர் சிவனடியார்களைப் போற்றுகின்றவர்-யாவர்வறுமைகளையுமாற்றுகின்றவர். மாயாபந்தங்களைத்தூற்றுகின்றவர்-உண்மையேசாற்றுகின்றவர்-குங்கிலியக்கலயநாயனார் என்னும்பெயர்பெற்றவர் திருத்தொண்டுசெய்யுநற்றவர்- இவர் திருக்கடவூர்ச் சிவாலயத்தில் பரமசிவனாருக்குக் காலையுமாலையும் சாம்பிராணித்தூப மூட்டுகிறவர் - கருப்பூரத்தீபமுங் காட்டுகிறவர் - பஞ்சாக்கரத்தை மனதிலேநீட்டுகிறவர் - இந்நாயனார் பத்தியைச்சோதிக்கவும் அன்புநிலைமை பேதிக்கவும் - வறுமைதொடர்ந்து வாதிக்கவும் உண்மையாகச்சாதிக்கவும் - கைலாயபதிக்குத் திருவுளமிருந்து துன்பமோங்க இன்பநீங்கச் செய்தார் - ஆதலால் வறுமைப்பட்டும் பெருமைவிட்டும் - குங்கிலியக் கலயநாயனார் சிவபணிவிடைகளைத்தள்ளவில்லை மனதிற்கள்ளங்கொள்ளவில்லை. நாளுக்குநாள் செல்வமெல்லாமொழிந்தும் பண்டமெல்லாமழிந்துப்போகப் பசிமேலாக மக்களும்மனைவியுந் துன்பப்பட்டார்கள் இவரிடத்துவந்தவினங்களுமத்துன்பத்திற்கெட்டார்கள்.

இப்படி இரண்டுநாள் பட்டினிகிடக்கையில் சிவபணிவிடையுநடக்கையில் நாயனார்-மனைவியார்-மக்கள். முதலானவர்கள்பசித்திருக்கிறதைத்தெரிந்தும்-யாவர்க்கு மமுதுபடைக்கப்பரிந்தும் - தனதுதிருக்கழுத்தில் கணவனால்தரிக்கப்பட்ட தாலியைஅவிழ்த்துத்தன்னாயகர்கையிற்கொடுத்துச் சுவாமி-இதைவிற்று நெல்வாங்கிவாருமென்றுசொல்ல-அவர் நல்லதென்றுவாங்கிச்செல்ல-ஒருவர்த்தகன்-வாசம்வீசும் சாம்பிராணிபொதி எதிரில்கொண்டுவரக் குங்கிலியக்கலயநாயனார்பார்த்து விலைதீர்த்துத் தாலியைக்கொடுத்துப்பொதியையெடுத்துக்கோயிலிற்சே

ர்த்துக்கட்டிகளைப்பேர்த்துச்சுவாமிக்குப்பூஜானைவேத்திய வேளையிலே சாம்பிராணித்தூபமணக்கும்படிககாட்டிமற்றதைப்பூசா திரவியச்சாலையில்வைத்துப்பூட்டித் திருச்சந்நிதியிலே அன்புபெருகவும அகமுருகவும் கடவுளகிருபைதருகவும் பத்திமேற்கொண்டெருகவும் இலச்சை நீங்கி இச்சையோங்கியிருந்தார்,

திருக்கடவூரிலெழுந்தருளிய பரமசிவனார் திருவருளால் அளகாபுரித்தலைவனாகிய குபேரனானவன் தன்னுடையதிரவியங்களைக் கொண்டுவந்து குங்கிலியக்கலயநாயனார்வீட்டில், மேட்டில் அளாவும்படி நெற்குவியல்களையும்பொற்குவியல்களையும் அணிக்குவியல்களையும், மணிக்குவியல்களையும் நிறைத்தான் - எங்குமிறைத்தான் -அன்றிராத்திரிநாயனார், பெண்சாதியும் பிள்ளைகளும் பசித்துநித்திரை செய்கையில் பரமசிவனார்நாயனார்மனைவியார் சொப்பனத்தில் செல்வநிறைந்திருக்கிறதென்றுசொல்ல. அம்மையார் மெல்லவெழுந்திருந்துபார்த்துப் பூரித்துக் கடவுள்செயலென்றுவிசாரித்து சிந்தனையில்லா வந்தனைசெய்து தன்கணவருக்குத்திருவமுது அமைகக்ச் சமைக்கத்தொடங்கினார். சுவாமி தமதுசந்நிதியிலிருக்குங் குங்கிலியக்கலயநாயனா ரிடத்திலும்போய் நாயனாரே நீர்பசித்திருக்கிறீர் பாலோடன்னம் போசித்துவா வீட்டிற்குப் போவென்றார்.

நாயனார் சுவாமிசொற்படிகேட்டுக் கோயிற்பொற்படியில்நின்று மதிதெரிந்து துதிபுரிந்து தமது திருமனையிலே நுழைந்து விழைந்துநன்குநிறைந்தசொத்துக்களையும், முத்துக்களையும், அணிகளையும் மணிகளையும்பார்த்தும், ஆசைநீத்தும், இல்வாழ்க்கைக்குத்தக்க மனைவியை நோக்கிஇப்பாக்கியம் ஏதென்றுகேட்க மனைவி சிவனதுதிருவுளச்செயலென்னநாயனார்கேட்டுநற்பத்தியும் விற்பத்தியுமில்லாமல் உற்பத்தியான இந்நாயின்பொருட்டு இப்படிச்செல்வங்கொடுத்த கடவுளைஎப்படித்துதித்துப்பாடத் திறமுடையவன் என்றுசொல்லிச் சிரமேற்கரம் வைத்துத் தோத்திரம்பண்ணினார், மனைவியார் கலத்தைச் சுத்திசெய்து ஜலத்தைக்கொண்டு அன்னமுதலிய பதார்த்தங்களைச்சமைத்தும் பால் தயிர்-நெய்-பழவகை- பணிகாரங்களமைத்தும் - சிவனடியார்களை உண்ணச்செய்தும் தாங்களுண்டும் வருங்காலத்தில்.

திருப்பனந்தாள் என்னுந்தலத்தில் பூமிபுகழுஞ்சிவலிங்கசுவாமியானவர், சாய்ந்திருக்கக்கண்டுசோழமகாராசன்விசனங்கொண்டு தன்னுடையயானைகளையும், சேனைகளையுங்கொண்டுவடங்கொண்டுபூட்டித் திடங்கொண்டிழுத்தும் இலிங்கஞ்சரிநிற்காமையால் இரவும்பகலும் அதிகவிசனப்பட்டிருக்க, அவ்விசனத்தைக் குங்கிலியக்கலயநாய[illegible]க

ளவிப்பட்டுத்திருப்பனந்தாளில் எழுந்தருளினான் படைந்துமிடைந்து நம்முடையககழுத்தில் இச்சையோடு கச்சைமாட்டிச் சுவாமி திருமேனியிலும்பூட்டி வழுக்கில்லாமலிழுக்க, மகாலிங்கம் அமர்ந்துநிமிர்ந்தது, அசுரர்கூட்டங்கள் பூமாரிபொழிந்தார்கள். நரர்கூட்டங்கள் சஞ்சலத்தினின்றெழுந்தார்கள் சோழமகாராஜன் குங்கிலியக்கலயநாயனார் அடியைமுடியில்வைத் தாடிப்பாடினார், குங்கிலியநாயனார் அரசனைச்சாத்திரவிதிப்படி தோத்திரஞ்செய்தார், சோழமகாராஜன் சிவசந்நிதிப் பணிவிடைகளைத் தெரிந்து புரிந்துபத்திசெய்து சித்திபெற்றிருந்தார்.

குங்கிலியக்கலயநாயனார், பரமசிவனார் இணையடிகளைத் துணையென்று பணிந்து சிலகாலம்போக்கித் திருப்பனந்தாளை நோக்கி வந்துதிருத்தொண்டுசெய்திருக்கையில் சைவசமயத்தலைவராகிய திருஞானசமபந்தசுவாமியும் அப்பர்சுவாமியும் எதிரில்வரக்கண்டெதிர்கொண்டுசென்றுநின்று நாயனார் இணக்கமாகவந்தனம்வணக்கமாகத்தந்தனமனைச்சாற்றிப்போற்றி இருவரையும் நல்லமுதுபடைக்க இல்லமதில் அழைத்து அகமுகங்களித்துத் திருவமுதளித்துப்பூசித்துநேசித்துச்சிவகதையோசித்து இருவர்திருவையும்பெற்றுப் பரமசிவதரிசனம்புற்றுறத்தன்றேயியன்றவளவு சிவாலயங்களுக்குப் பொற்பணி கற்பணிநடத்திக் காலங்கடத்தி எயிலாயிருக்கும் கயிலாயஞ்சேர்ந்தார்.

திருச்சிற்றம்பலம்.

---

௰

சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

## மானக்கஞ்சாறநாயனார் சரித்திரம்.

---

கஞ்சநகர்மானக்கஞ்சாறனார்சீர்க்காதன்மகள்வதுவைப்பணக்காணகாதன், வஞ்சமலிமாவிரதத்தலைவனாகி வந்துபுகுந்தவன் ளகமகிழ்ந்துநோக்கிப், பஞ்சவடிக்காமென்னவரிந்துநீட்டும் பதத்தொடிர்மறைந்திறைவன்பணிந்தவாக்கா, லெஞ்சலில் வண்குழல்பெற்ற பேதைமாலதயோர்பிராற்குதவியருளெய்தினரோ. ()

---

திருக்கஞ்சாறூரில் வேளாளர்மரபில் உற்பத்தியானவர், தலைமைபொருந்திய சீலமதிருந்திய பரம்பரையுடைய, அரசர்களுக்குமந்திரி

ரியானவர்- மானக்கஞ்சாறநாயனார் இவர் பத்தியிலும் புத்தியிலும்- யுத்தியிலும் - சத்தியிலுமிகுந்தவர்- வல்லமையாவுக்குந்தகுந்தவர் - சிவனேவல்லவன் அவனேநல்லவன் எனத்துதிக்கிறவர்- அடியார்திருவடிகளை முடிமேலேபதிக்கிறவர்-சிவபணிவிடைகளைவிடாதிருக்கிறவர். அவமானதொழில்களைத் தொடாதிருக்கிறவர். யாரொதைக்கேட்கினுந்தருகிறவர் - தரும மென்மேலுஞ்செய்துவருகிறவர் - அளவிலாச்சம்பதத்தையுடையவர் - இந்நாயனார், தம்முடைய குலம்விளங்கப் பிள்ளையில்லாமையால் சிவனைக்குறித்து நன்மலர்பறித்துச்சாத்திரவிதிப்படிதோத்திரஞ் செய்தார். பூசைசெய்தஅருமையினாலும் பெருமையினாலும் சுவாமிக்குண்டான திருவருளால் நாயனாரிடத்தில் அறபுக்கற்பு முள்ளமனைவியார்திருவயிற்றில்அழகெல்லாந்திரண்டுகருவுருகொண்டொருபெண்குழந்தைபிறந்தது. அதனால் மாதா பிதாக்களுடைய மனக்கவலையிறந்தது - குழந்தையைப்பாராட்டிச்சீராட்டித் தாராட்டிப் பணிநீராட்டிச் செழுமையாகவுங் கொழுமையாகவும் வளர்த்தார்கள் அதுநற்பருவகாலத்தில் பொற்பணிகற்பணி யலங்கரித்து நல்லுடைமெல்லுடை தரித்துப்பாங்கிமார் சூழ்ந்துவரும்படி வாழ்ந்துவரும்போது,மானக்கஞ்சாறநாயனார் அருமைத்திருமகளை ஏயர்கோன் தம்முடைய குமாரனாகியகலிக்காமநாயனாருக்கு விவாகமுடிக்க விருத்தாகள்மணம் பேசவந்தார்கள், மானக்கஞ்சாறநாயனார்வந்தவர்களுடன்கலந்து தன்குலமாகையால் நன்குலமென்று பெண்கொடுக்கச் சம்மதித்தார். விருத்தர்கள்இச்செய்தியை ஏயர்கோனாயனாருக்குப்போய்ச் சொன்னார்கள. அவர்கேட்டுமகிழ்ச்சியடைந்தார்.

மானக்கஞ்சாறநாயனார், பூதேவியையும் சீதேவியையும் பழிக்கும் அழகுபொருந்திய மாணிக்கவிளக்கம்போன்ற தம்முடைய மகளுக்குத் திருமணமுடிக்கத் தன்னுடைய வீடெங்கும் நாடெங்கும் இச்சையோடு பச்சைப்பந்தலிட்டுப் பொற்பாலிகை பூரணகலசம் பொன்விளக்கு முதலியன பரப்பி யாவுங்குறைவில்லாமல்நிரப்பிப்பெண்ணைத்திருமணக்கோலமாகச்சிங்காரித்து மனம்பூரித்துஇருக்கையில், பரமசிவனார் சிவதவமுனிவராகத் திருவுருவெடுத்துமானக்கஞ்சாறநாயனார் திருமனைக்குள்வர நாயனார் பாசமாகவுநேசமாகவும் முனிவரைப் பணிந்துதிருவடியைமுடியிலணிந்து நிற்கையில் முனிவர் நாயனாரே,கலியாணம்யார்க்கென்னநாயனார் தம்முடையமகட்கென்றுசொல்ல அவர் ஆசீர்வதிக்க நாயனார், மணக்கோலமானமகளை வரவழைத்து முனிவர்திருவடியில்வணங்கச்செய்தார். முனிவராகவந்தசுவாமி, பெண்ணின்கூந்தலழகைக் கண்டுமானக்கஞ்சாறநாயனாரே, உம்முடையமகட்கூந்தலைக்கொ

டப்பிரானுல் நம்முடைய பஞ்சவடிக்கயிற்றுக்குத் தக்கதாகவிருக்கும் என்றுசொல்ல நாயனுர் அதிகியந்தபத்தியுடனே வாளையுருவிக்கூந்தலைக்கொததாக அறுத்து முனிவர்கையிற்கொடுக்கச் சுவாமிவாங்குகிறவர் போல மறைந்து பார்ப்பதிசமேதராய் இடபவாகனராய் முன்னேவந்து தரிசனை தந்து நிற்கையில் மானக்கஞ்சாறநாயனுர் என்னையனேயைப் பில்லாமெய்யனே எம்முடைவா தில்லைத்தாண்டவா வந்தனம் வந்தனம்என்றுவிந்தியொடு துதிசெய்தார் தேவர்கள் கற்பகமலர்மழை தூவினுர்கள்- யாவருமானக்கஞ்சாற நாயனுரைப்புகழ்ந்துகூவினுர்கள்-சுவாமிநாயனுருக்கருள் செய்தார். பரமசிவத்தினருளால் பெண்ணிற்கும்அறுபட்டகூந்தல்வளர்ந்தது.கலிக்காமனுயனுர்வந்துசேர்ந்தார்,பெண்ணை விவாகஞ்செய்துகொண்டு மனங்களிகூர்ந்தார். மானக்கஞ்சாறநாயனுர் சிவபதஞ்சார்ந்தார்.

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அரிவாட்டாயநாயனுர்சரித்திரம்.

---

ஆழ்ந்தகாவேரிசூழ்ந்த சோழவளநாட்டில் திருக்கண்ணமங்கலத்தில் வேளாளர்குலத்தில் தாயனுர்என்றெருவர் கரும்த்தை நீக்கித்தருமத்தைநோக்கிநடக்கிறவர். பரமசிவத்தி லன்பு நிலைமைகொண்டவர்-திருத்தொண்டிலே தலைமைகொண்டவர்-குபேரபாக்கியமும்-பத்திவைராக்கியமுமுடையவர் - சிவசந்நிதிக்குப் பூசைசெய்வேத்தியமும் - சிவனடியார்களுக்குத் திருவமுதும்-நடத்திவருநாளையில்கைலாயபதியானவர், தாயனுர்பத்தியை யறியும்படிக்குச் செல்வ மெல்லாமாறவும் வறுமைமேன்மேல் வளர்ந்தேறவும் எண்ணினுர், எண்ணியபடிபண்ணினுர், நாயனுர் செல்வமழிந்து மொழிந்தும் - இவர்மனஞ்சலியாமல் நலியாமல் முன்னிருந்த பத்தியிலும் பின்னிருந்தபத்தி மேற்பட்டிருந்தது. தாயனுர் வறுமையடைந்து கூலிக்குச் செந்நெல்லறுத்து அன்றைக்கன்றுவருங்கூலிநெல்லை அரிசியாக்கித்திருவமுதுசமைத்துச்சுவாமிக்கும் சிவனடியார்களுக்கும் படைத்துவருவார். கார்நெல்லறுத்துக் கூலி யாகவருநெல்லை தமக்குப்போசனத்திற்குவைத்துக்கொள்வார்.

தாயனுர், ஒருநாள்வேலையுங்கிடையாமல் கூலிநெல்லு மகப்படா



அரிவாட்டாயனார்

மல் பசித்திருக்கையில்இவரன்பிற்குரிய கற்புடைமனைவியார்கீரைகொய்து பாகஞ்செய்துகொடுக்க இருவரும்பசித்துப் பொசித்து நித்தியகடமைதவறாதுநடத்திவருவார்கள். கீரையுங்கிடையாமல் தண்ணீரையள்ளிக்குடித்துத் திருப்பணிவிடைசெய்து முடித்துச்சிவனுக்கும சிவனடியார்களுக்கும் குறைவில்லாமல் நிறைவாகத்திருவமுது கூலிவேலை செய்து நடத்திவருங் காலத்தில் தாயனார் சாம்பசிவமூர்த்திக்குத் திருவமுதுபடைக்கச் செந்நெல்லரிசியும், மாவடுவும் செங்கீரையும், கூடையில்வைத்துச் சுமந்து கொண்டுபோக மனைவியார் பின்னாலே பஞ்சகௌவியமெடுத்துக்கொண்டுபோனார். தாயனார் பொசிப்பில்லாமையால், சரீரம் உலர்ந்து புலர்ந்து தாளினைத்துத் தோளினைத்துத் தள்ளாடிப் பூமியில்விழுந்தார்.

அவர்மனைவியார் பஞ்சகௌவியமுடையகலயத்தை வைத்திருந்த கையால் நாயகனைககட்டிக்கொள்ளப்பஞ்சகௌவிய மெல்லாங்கமரில் விழத் தாயனார் இனிச்சிவசந்நிதிக்குப்போயென்ன செய்கிறது எல்லாம்வீணாயிற்றுக் கமரிற்போயிற்றுஐயையோதெய்வமே என்ன செய்வேன், சிவபணிவிடைதவறிவிட்டது. என்மதியுங்கெட்டது. இனி என்னுயிரை வையேன்யாதொன்றையுஞ் செய்யேன் என்று அரிவாளையெடுத்துக்கழுத்தை யறுத்துக்கொண்டார். அப்பொழுது அந்தக்கமரிலிருந்து சுவாமி திருக்கரமெழும்பித் தாயனார் அரிவாள் பிடித்த கையைப்பிடித்தது சுவாமி மாவடுவைக்கமரிலிருந்து கடித்தசத்தமும் விடேலெனக்கேட்டது.

தாயனார்பயங்கொண்டு நயங்கண்டு துன்பம்பறக்க இன்பூஞ்சிறக்கப் பரமசிவத்தைக்குறித்து என்குலதெய்வமே. சிவாநந்தமே பேரின்பவெள்ளமே-கிருபாசமுத்திரமே-தோத்திரபதோத்திரமெனத்துதிசெய்தார். பரமேச்சுரர் பார்ப்பதிதேவியாரோடு ஆதிநிறம்போல நந்திவாகனத்தேறிக்காக்ஷிகொடுத்து இருவரையுங்கைலாயத்திற் கழைத்துக்கொண்டு போயத் தம்முடைய திருவடித் தாமரை களில் வைத்தருளினார்.

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

# ஆனாயநாயனார் சரித்திரம்

——(*)——

அளவில்லாவளமெல்லாந் தங்கிப்பொங்கி விளங்கும் மழநாடு

ன்றொருநாடு அந்நாட்டில் மங்கலமென்றொருவூர். அவ்வூரில் இடையர் குலத்தில் அற்புதமாக உற்பத்தியானவர். ஆனாயநாயனார் இவர்பரமசிவனார் பாதங்களையே போதங்களாகப் போற்றுகிறவர் - ஆட்டையுமாட்டையுங்காப்பாற்றுகிறவர் - ஆயர்குலத்திற்குத்தலைமைபெற்றவர் - சிவசிந்தையிலே நிலைமைபெற்றவர். பலவிதவாட்டுக்கிடைகளும், பசுக்கூட்டங்களுமுடையவர் - காட்டிலுநாட்டிலும் - ஆடுமாடுகளை மேய்க்கிறவர் - அணியணியாகச் சாய்க்கிறவர் ஒருநாள் திருநாள்போலக் கைலாயவாசனை நினைத்துப் புள்ளாங்குழலெடுத்துச் சத்தசுரங்களையடுத்துப் - பஞ்சாக்கரத்தைத்தொடுத்து உலகசிந்தையைவிடுத்துக் கல்லும் புல்லும் உருகும்படி, அல்லும்பகலுஞ் சங்கீதம்பாடிப் பின்பு - ஆடுமாடுகள் சூழ்ந்துவர இடையர்களும், அடிபணிந்துதாழ்ந்துவரக் கொன்றைமரத்தடிச் சென்றுநின்று நிதானித்து அச்சிவனைத்தியானித்து - அன்புபெருகியென்பு உருகும்படி கடல்மடைதிறந்ததுபோலும் எச்சுதந்குளன்னும் இரண்டோசையுஞ் சுரங்களோடமையப் புள்ளாங்குழலூதின ஓசையை எல்லாமிருகங்களுங்கேட்டசைவற்று நின்றன - கன்றுகள்பால்மறந்தன - கின்னரர் கிம்புருடர் - வித்தியாதரர் - முதலான தேவர்களெல்லா மேக்கங்கொண்டு. மயங்கினார்கள். எவ்வுலகத்தோருந் தியங்கினார்கள் - சத்தசமுத்திரங்களும் ஓசையடங்கின - சகலவுயிர்களும் இசைகேட்கத்தொடங்கின. வெள்ளிமலையீசராகிய வேமதுலகலாயவாசர் பார்வதியோடும் - இடபவாகனத்தில்வந்து திருக்காக்ஷிதந்து ஆனாயநாயனாரே உம்முடைய வோசையைக்கேட்டெம்முடையசெவிகளிக்கது மனதிற்குத்தேன்துளித்தது, என்றுமகிழ்ந்தருள்செய்து ஆனாயநாயனாரைத் தமது திருக்கைலாயத்தில் திருச்சந்நிதானத்தில் திருக்கூட்டத்திருச்செவிக்கு ஆனந்தமூட்டப் புள்ளாங்குழலூதிக்கொண்டு சதாகாலமுந் தம்முடைய திருவடிநீழலிலிருக்கும்படியழைத்துக்கொண்டுபோய் விட்டார்.

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# மூர்த்திநாயனார் சரித்திரம்.



பாண்டிவளநாட்டில் மதுராபுரியென்னும் பட்டணத்தில் மணிகள்விற்கும் வணிகர்குலத்திற்பிறந்தவர் - மூர்த்திநாயனாரென்னும் திரு

நாமமுடையவர் - அன்பெல்லாந் திரண்டொருண்டோர் வடிவமாகவந்தவர் - சிவபூசைநேசர் - பத்தியிலத்தியந்தவிசுவாசர் - மதுரையிலெழுந்தருளிய சொக்கலிங்கத்திற்கு வந்தனமாகச் சந்தனக்காப்பணிபவர் - அந்திசந்தியும்பணிபவர் - சிவனடியார்திருவடிகளைத் திருமுடியில்வைத்துத் திருத்தொண்டுசெய்து, சிவாலயத் திருப்பணிவிடைகள் திருந்தப் பொருந்தச்செய்து வருநாளையில், கருநாடதேயத்தை யாளுகின்றவனாகியும். வடுகர்குலத்திலவதரித்தவனாகியும், விளங்குகின்ற ஒருவிராசாதிபதி யானை-குதிரை-சேனை-தேர்களோடுமதுரையில்வந்து, பாண்டியன்வலிமைதெரிந்து, போர்புரிந்து - நின்று - வென்று - மதுரைக்கரசனான பாண்டியனுந் தோற்றுப்போனான்.

வடுகராசன் சைனர்கள்போதனைக் குட்பட்டுத் தன்குலமுதலியனவொழுக்கங்கள் கெட்டுப்போக அவர்களமதத்திற் குடன்பட்டான். சிவனடியார்களை வருத்தத்தலைப்பட்டான் - அரசன் மூர்த்திநாயனாரவர்கள் சமணமதத்திற்குட்படவும்-சிவசந்நிதிக்குப்பணிவிடைகள்கெடவும் - யாவருஞ்சைவசமயத்தைவிடவும் செய்துவந்தான். அதுகண்டுமூர்த்திநாயனார் திருப்பணியிற் குறையாதவராய்ச் சுவாமிக்குச் சந்தனக்காப்பிட்டுவருகையில் அவன் மூர்த்திநாயனாருக்குச் சந்தனக்கட்டைகிட்டாமலும் யாவருங்கொடுக்கவொட்டாமலும், கட்டளைக்கொடுத்தருள நாயனார், சொக்கலிங்கத்துக்குப் பந்தனமான சந்தனமில்லையென்று பரிந்து வருந்தி யெங்குமோடி மனம்வாடிச் சந்நிதியில்வந்து சந்தனக்கட்டை கிடையாமையால் அதற்குப்பதிலாகத் தமது முழங்கையைச் சந்தனக்கல்லிலே சாய்த்துத் தேய்த்துநிற்கையில் உதிரம்பெருகுகிறதையும் எலும்பிலிருந்து மூளைவருகிறதையுஞ் சுவாமிகண்டுகொண்டு திருவுள்ளமுருகித் திருவருள்பெருகி அசரீரிவாக்காகவொருதிருவாக்கருள்செய்கிறார், மூர்த்திநாயனாரே, உமதுபத்தியைக் கண்டோம ஆநந்தங்கொண்டோம் பாண்டிவளநாடு முழுதுநீரேயாளவும், உமக்கிடர்செய்தவன் மாளவும், கிருபைசெய்வோம, ஆகையால் திருமதுரையாண்டு திருப்பணிவிடைசெய்து திருக்கைலாயத்திற்கு வாவென்றார்.

திருவாக்கைக் கேட்டவுடனே தேய்ந்ததையும் வளர்ந்தது கைதையிற் றுன்பமுந் தளர்ந்தது, அன்றிரவில் வடுகராசன் வாழ்நாளு முடிந்தது பொழுதும் விடிந்தது அப்பொழுது அரசனுக்குப், பிள்ளையில்லாமையால், மந்திரிமார்களும் பெரியார்களும் பட்டத்துக்கரசன் வேண்டுமென்று பட்டத்து யானையைக் கண்ணைக் கட்டி விட்டார்கள். அந்தயானை சொக்கேசர் திருச்சந்நிதானத்தில் திருக்கோபுரவாயில் வந்துநிற்க மூர்த்திநாயனார் எதிரில்வர அவரை யா

னைவணங்கிப் பிடரியிலெடுத்து வைத்துக்கொள்ள மந்திரிமார்முதலா னவரும் அவர்திருவடியைமுடியிலணிந்துபணிந்து நடந்தார்கள்யானை நாயனுரை அரண்மனையுள்ளே திருக்கொலுவிருக்கு மண்டபத்திற்கொ ண்டுபோய்விடச் சாத்திரவிதிப்படி இராசபட்டங் கட்டினூர்கள். யாவ ருஞ்சமணமத மொழிந்தசென் றுகைகட்டினூர்கள் - மூர்த்திநாயனுர். ச டைமுடிவிபூதிருத்திராட்சந் தரித்துப்பஞ்சாக்ஷரதத்தையுச்சரித்துச் ச மணசமயம் பறக்கச் சைவசமயஞ் சிறக்கச்சிவ பணிவிடை பூண்டு சி லகாலமரசாண்டு - திருக்கைலா யத்திற்சிவனது திருவடி நிழலைச்சேர் ந்தார்.

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## முருகநாயனார்சரித்திரம்

சோழவளநாட்டில் பூம்புகலூரில் நாற்குலத்திற்குமேற்குலமாகிய பிராமணர்குலத்தில், அவதரித்தவர் - வேதசாத்திரபுராணங்களாக மங் களாய்ந்தவர் - சைவசமய நிலையிற்சாய்ந்தவர் -சகல நற்குணங்களும்வா ய்ந்தவர் - அத்தியந்தம்பத்தியிலே தோய்ந்தவர் - சிவனடியார்களுக்கு நேயனுர். இவர்திருநாமமுருகநாயனுர்-திருப்புகலூரிலெழுந்தருளிய பர மசிவனூருக்கு ஒவ்வொருதினத்தில் நந்தனவனத்தில் பலவகைமலர்ப றித்துத் திருமாலைகட்டித் திருமுடியிற்சூட்டுகிறவர். சிவபத்தர்க்குவே ண்டியன தருகிறவர் - இவர் சீர்காழியி லவதாரஞ்செய்த திருஞானசம் பந்தமூர்த்திசுவாமிகளுடைய திருக்கலியாணத்தில் பரமசிவனுர் அரு ளாகியபொருளை யநுக்கிரகஞ்செய்ததனுல் நிலைமையாகிய தலைமையை யுடைய கைலாயபதவியை அடைந்தார்.

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## உருத்திரபசுபதிநாயனார்சரித்திரம்.

சோழதேயத்தில் திருத்தலையென்னுந்தலத்தில் நலத்தையுடைய வேதியர்குலத்தில் தபோபலத்தைப்பெற்ற உருத்திரபசுபதி நாயனுர்பி

றந்தார். அன்பிலும்பத்தியிலுஞ் சிறந்தார். சைவசமய சித்தாந்தப்படி சிவனே முதற்கடவுள் என்றுபகுத்து வகுத்துச் சைவாகமவிதியின்பிரகாரம் பரமேச்சுரராகிய தேவர்க்கும் - பழவடியார் யாவர்க்கும் செய்யுங்கருமங்களைத் தருமங்களாகச்செய்து வேதசாரமாகிய உருத்திரமந்திரத்தைத் தடாகத்திலிருந்து மனந்திருந்தும்படி செபம்புரிந்து - பரிந்திவருந்திப் பரமசிவனைப்போற்றுகையில் சுவாமி இடபவாகனத்தின்மேல் உமையவள் அமையும்படி தரிசனைதந்து திருவருள்செய்தார்.

திருச்சிற்றம்பலம்,

௨

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருநாளைப்போவார்நாயனார் சரித்திரம்



எள்ளிடமில்லாது நிறையும் கொள்ளிடநதிசூழ்ந்த சோழவளநாட்டிலிருக்கு மேற்கா நாட்டில் ஆதனூரில் தீண்டப்படாதார் குலத்தில் சேற்றிற் செந்தாமரை யுற்பத்தியானதுபோலும் நந்தனொருவர்பிறந்தார் - அவர் விவேகசூட்சியும் வெட்டிமைத்தனமாகிய காணியாட்சியும் - சிவபணிவிடைகளில்-மாட்சியும் - சிவனடியாரைக்காணுங் கண்காட்சியும் உடையவர் - இவர்குலாசாரத்தன்மைய நன்மையுஞ்செய்து மலர்கொய்து தாஞ் சிவபூசைசெய்து சிவாலயங்களுக்கு அறையும் பேரிகை மத்தளங்களுக்குத்தோலும் வாரும் யாழுக்குநரம்பும் சுவாமிக்குக்கோரோசனமும் - முறையாகவும் இறையாகவுங் கொடுத்துவருவார். சிவாலயத்தில் அந்திசந்தியிற்போய்த் தூரதிருந்து மனங்கசிந்துருகிச சிவனைப்பாடியாடி வருகிறநாளில் திருப்புன்கூரில் பரமசிவத்தைத் தரிசிக்க ஆதனூரிலிருந்துவந்து திருக்கோயிலின் திருவாயிலினின்று சிவலிங்கத் தரிசனைகாண ஆவலாகவுங் காவலாகவும் வணங்கிப் பாடுகையில் பரமசிவனார் சந்நிதிக்கு முன்னிருக்கு நந்திகேசுரனை விலகும்படிசெய்து காட்சிகொடுத்தருளினார்.

நந்தனார் சுவாமிதரிசனைசெய்து வரும்வழியில் ஒரு பள்ளத்தைக் கண்டு அதைப் பெருங்குளமாகவெட்டித் தம்முடைய ஆதனூரொன்றுஞ் சேரிக்குப்போனார். இவ்வாறு பலதலங்களை வலஞ்செய்து நலஞ்செய்து ஆத்திமலரணிந்த சிவனையேத்திச் சிதம்பரத்திற்குச்செல்ல,மனம்வந்து தம்முடைய சாதிகோயிலுக்குப்போக யோக்கியமில்லையென்று விசனமடைந்து நாளைக்குப்போவோமென்று சொல்லியிருந்தார்.

சிவபணிவிடையாற் போகக்கூடாமையால் அநேகநாள்சென்றன - நாளைப்போவோமென்றபடியால் அவர்க்குத் திருநாளைப்போவாரென்று பெயர்வந்தது. திருநாளைப்போவார் சிதம்பரத்திற்குவந்து அதனெல்லையைவணங்கி யாகங்களையும், பிராமணர்களையும் மடாலயங்களையும், கண்டு. சிதம்பரத்துள்ளேபோகப் பயங்கொண்டு ஊரைச்சுற்றியிருக்கு மதில்வாயலைச்சேர்ந்து இப்பதியிற்புகுந்து துதிசெய்ய விதியில்லையென்றுங்கதிகிடையாதென்று மதிமயங்கித்தினமனமுருகிச் சிரமதினிருகரம்வைத்தெல்லையை இரவும்பகலும் வலம்வந்து சபாநாயகனைக் காணப்பாக்கியம் பெற்றிலேனென்று இளைத்துக்களைத்து நித்திரைசெய்கையில், சுவாமி அவர்சொப்பனத்தில்வந்து திருநாளைப்போவாரே, நீர்அக்கினியிலேவிழுந்தெழுந்துதில்லைவாழ்பிராமணர்களோடுதமதுதிருச்சபைக்குவந்துசேரென்றுதில்லைவாழந்தணர்களுக்குந்தீயைவளர்க்கும்படிசொப்பனஞ்சாதித்துததிருசிற்றம்பலத்திலெழுந்தருளினார். தில்லைவாழந்தணர்கள் கூடிச்சுவாமிதிருச்சொப்பனப்படிக்குத்தீயைமூட்டித்திருநாளைப்போவாரிடத்தில்வந்து சிவபத்தரே சுவாமிதிருவாக்கின்படி தீமூட்டினோமெழுந்தருளுங்களென்ன அவர் பிராமணரைத்தொழுது தெற்குத்திருக்கோபுரவாயல் வளர்த்திருக்கும், அக்கினியைவலம்வந்து சிவனைச்சிந்தித்து அக்கினியில் மூழ்கிச் சிவபிராமணமுனிவர் திருவுருவாகவந்தார்-தேவர்கள் கற்பகமலர்மாரிவருஷித்தார்கள், தில்லைவாழந்தணருஞ் சிவபத்தரும்பணிந்தார்கள். திருநாளைப்போவார் சந்நிதியிலேபுகுந்தார் சுவாமி தம்மிடத்திருக்கும்படி திருவருள்செயதார் - அவரையாவருங்காணாதவர்களானார்கள்.

திருச்சிற்றம்பலம்,

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருக்குறிப்புத்தொண்டநாயனார்சரித்திரம்

தொண்டைவளநாட்டில் காஞ்சீபுரத்தலத்தில், ஏகாலியர்குலத்தில் திருவவதாரஞ்செய்தவரொருவர், அவர்சிவனடியார்களை யடுத்து அவர் குறிப்பின்படிவேண்டுவனகொடுத்து வருகையால் திருக்குறிப்புத்தொண்டநாயனாரென்றுபேர்பெற்றார் இவர்திருநீறு உருத்திராக்ஷமணிபவர் அடியார்களைச் சிவனாகப்பணிபவர் - வேதாகமசாத்திர விதிப்படி துன்மார்க்கநீக்கி, நன்மார்க்கநோக்கி நடக்கிறவர் பவத்தைத்தக்கடக்கிற



திருக்குறிப்புத் தொண்ட

நாயனார்

வர் இவர் தங்குலமுறைத்தொழிலை நடத்திச் சிவனடியார்கள் ஆடையழுக்கைநீக்கிச் சுத்தமாக்கி அடிபணிந்து கொடுத்துவருநாளையில.

காஞ்சியில்வாழேகம்பர் இந்நாயனார்பத்தியை யறியும்படியெழுந்தருளி மிகவும்வறுமையைப்போல அழுக்குக்கந்தையை உடுத்துச் சிவபத்தர்வேடமெடுத்து நாயனாரையடுத்துக் குளிரெடுத்து உடல்நடுக்கவந்தார். நாயனார் பெரியவரைப்பார்த்து இருகரமுஞ்சேர்த்துச் சேவித்துச் சிவனாகப்பாவித்துச் சுவாமிதங்கள்திருமேனியிற் போர்த்திருக்கும் அழுக்கடைந்த கந்தையைத்தாருங்கள் பரிசுத்தமாக்கித் தருகிறேனென்றார் அதற்குச்சுவாமி இந்தக்கந்தையைவிட வேறொருகந்தை நமக்கில்லை நாம்விருத்தராகையால் குளிர்பொறுக்கமாட்டோம், பொழுதுபோகுமுன்னே இதைவெளுத்துலர்த்தித் தருவீராகில், தருகிறோமென்று கந்தையைக்கொடுத்து நீர் விரைவிற்கொடாவிடில் சரீரத்திற்கு அபாயம் வருமென்றார்.

திருக்குறிப்புத்தொண்டநாயனார் சீக்கிரம்வெளுத்துலர்த்தித் தருவேனென்றுவாங்கிக் குளத்தருகிற்சென்று கந்தைக்கு உவர்மண்சாணங்கார முதலியனவிட்டு வெள்ளாவிவைத்து வெளுக்கையில் சுவாமி இருடையால் விடாமழைபெய்தது பொழுதும்போயிற்று நாயனார் சிவபத்தராகிய விருத்தாப்பியர் திருமேனிகுளிரினாலே நடுக்கங் கொள்ளுமே தள்ளாமையினாலே தள்ளுமே ஐயோ எப்படியென்னசெய்வேன் என்று கீழேவிழுந்து எழுந்து இனியென்னுயிரை வையேன் பெரியோருக்குப்பிழைசெய்தேனென்று தமது தலையை வத்திரம்வெளுக்குங்கற்பாறையின்மேல் அத்தியந்தபத்தியுடன் இடித்துக்கொள்ள அப்பாறையிலிருந்து பரமசிவனார் திருக்கரமெழும்பித் திருக்குறிப்புத்தொண்டரது சிரத்தைப்பிடித்துக்கொண்டு சுவாமிபிரசன்னராகிக் காட்சிகொடுத்தருளினார். விண்ணுள்ளோர்க்கண்டு புகழ்ந்தார்கள் - மண்ணுள்ளோர் துதிசெய்து மகிழ்ந்தார்கள்.

திருச்சிற்றம்பலம்,

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# தண்டேசுரநாயனார்சரித்திரம்

——(* ❋ *)——

சோழதேயத்தில் மண்ணியாற்றின் தென்கரையில் சேய்ஞலூரில் வேதப்பிராமணர்குலத்தில் காசிபகோத்திரத்தில் எச்சதத்தனென்பவ

னிருந்தான். அவனுக்குமனைவிபவித்திரை யென்றவள் இவள்வயிற்றில் விசாரசருமர்பிறந்தார். இவர்வேதாகமசாத்திரபுராணமுதலிய பலகலைக ளையுங் கற்றுணர்ந்து வருகையில், கடம்அநித்தியமென்றும் கடவுளே நித்தியம் என்றுதெரிந்துசந்ததஞ் சிவனைச்சிந்தையில் வந்தனஞ்செய்து வருவார், பிராமணப்பிள்ளைகளும்தாமுமாட்டுமந்தைகளுடனே கூடப் போகையில் இடையன்கன்று போட்டபசுவை அடிக்கிறதை விசாரச ருமர்கண்டு இடையர்பசுவின்மகிமை யுனக்குத்தெரியாது இப்படியடி ப்பார்களோ வென்ன அவன் அதையுங்கேளாமலடிக்கஅவரதைவிலக் கிப் பசு எல்லாமிருகங்களிலுமுயர்ந்தது. தேவர்களாலு மூவர்களாலும யாவர்களாலும்புகழப்படத்தக்கது அதன்சாணம்நீறாக்கப்பட்டும் பரம சிவத்தின் திருநெற்றியிலணியப்படத்தக்கது, அதன்சலம் அசுத்தங்களை நீக்கிச்சுத்தமாக்கிவிளங்குந்தன்மையது,

இப்படிப் பட்ட பசுவின் பெருமை யாவராலுஞ் சொல்லக்கூடு மோதேவராலுஞ் சொல்லி வெல்லக் கூடுமோ என்று சொல்லிப் பசு க்களைக்காப்பதைவிடத் தவம் வேறில்லை யெனத் தெரிந்து பரிந்து இ டையனைநோக்கிப் பசுமேய்க்காமல் நீக்கித்தாமே பசுக்களைச் சாய்த்து மேய்த்துக்கொள்ளமெளளப்பசுவிற்குச் சொந்தக்காரரை இணக்கிவ ணக்கிக் கல்லுக்களில்லாத புல்லுக்களுள்ள நிலத்திலேப்சுக்கூட்டங்க ளைநடத்திக்கடத்திமேய்த்து அவைகளைச்சலத்தில் விட்டுத் தேய்த்துக் குளிப்பாட்டி வளர்க்கையில்பசுக்கள்செழுமையுள்ளனவாகவுங்கொழு மையுள்ளனவாகமிருந்தன, பாலுமதிகங்கறந்தன இவர்மேலும்புகழ்சி றந்தன பிராமணர்கள்யாவரும் விசாரசருமனைக்கனமாக வெண்ணினா ர்கள். தினமுதவிபண்ணினார்கள் - விசாரசருமாசுவாமிக்குப்பாலினாலே திருமஞ்சனமாட்ட அன்பு கொண்டுமண்ணியாற்றிலே ஆத்திமரத்தி ன்கீழே மணலாற்கோயிலமைத்து இலிங்கஞ்சமைத்துக் காட்டுப்பூக்க ளையும கோட்டுப் பூக்களையுங் கொய்து சுவாமிக்குப் பாலாலபிடேகஞ் செய்து மலர்களைத் திருமுடியிற்பெய்து தாமுஞ்சந்நிதி முன்னெய்து சர்ச்சனமாகஅர்ச்சனைபண்ணிச் சாத்திரப்படி தோத்திரஞ்செய்துவரு நாளில்,

ஒருபிராமணன் விசாரசருமர்பாலையெல்லாஞ்சிவத்திலே இச்சை வைத்து அவத்திலே செலவழிக்கிறானென்று பசுக்களையுடைய பிராம ணர்களுக்குஞ்சொல்ல, அவர்கள் விசாரசருமர்தகப்பனாராகிய எச்சதத் தனைவரவழைத்து உமதுமகன்எங்கள்பாலைக்கறந்துமணலிலே சிவலிங் கத்திற்குச்சொரிகிறானென்று சொல்ல எச்சதத்தனறிந்து விசாரிப்பே னென்று விசாரசருமருக்குத்தெரியாமல்-வீட்டில்நின்றுகாட்டிற்சென்



திருநாவுக்கரசு சுவாமிகள்

று ஒருகுராமரத்திலேறி யொளித்திருந்தார் - விசாரசருமர்மண்ணியாற்றின்மணலில்வந்துமுன்போலக் கோயிலும இலிங்கமு மணலாற்செய்து ஆவின்பாலாலபிடேகமாட்டிப் பலமலர் களைச் சூட்டித்துதித்து நிற்கையில் இவர்பிதா எச்சதத்தரிறங்கித்தடியாலடித்தார். விசாரசருமர்பத்தியால் வருத்தமறியாது பூசைமுடித்தார்பின்னும்பிதா பாற்பானைகளையுடைத்தார். விசாரசருமர்பிதாவென்றறிந்து திருமஞ்சனப் பாற்குடத்தை யுடைத்தகால்களைத்துணிப்பேனென்று பசுமேய்க்குங்கோலையெடுத்துவீசினார் அதுமழுவாயுதமாகிக் கால்களைவெட்டியது. விசாரசருமர் பிதாவருத்தம் பாராதவராய் அவருடன்சோராதவராய்ஆசையோடு பூசைசெய்திருக்கப்பார்வதியாரும் பரமசிவனும் மாட்சியாகக்காட்சிதந்து விசாரசருமரே. எமதுபொருட்டு உமதுபிதாவைவெட்டினீர்நாமேயுமக்குத்தாய் தகப்பனென்று தழுவியெடுத்து இருகையா லிணைத்துமார் போடணைத்துக் கையைக்கொண்டு மெய்யைத்தடவி இச்சையோடுச்சியைமோந்து, திருமுடியிலணிந்த திருமாலையையுஞ் சூட்டிச் சிவகணங்களுக்குத்தலைமையென்று பரிவட்டமுங் கட்டித்திருப்பிரசாதமுங்கொடுத்துத் திருவருள்புரிந்துதிருக்கைலாயத்திற்கு அழைத்துக்கொண்டெழுந்தருளினார், எச்சதத்தருங்குற்ற நீங்கிச்சுற்றத்தோடு கைலாயஞ்சேர்ந்தார்.

திருச்சிற்றம்பலம்,

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருநாவுக்கரசுநாயனார் சரித்திரம்.

திருமுனைப்பாடிவளநாட்டில் பெண்ணைநதிக்கரையில்திருவாமூரில் வேளாளர்மரபில் கொறுக்கையர் குடியில் உற்பத்தியாகியவர்புகழனார். இவர்மனைவி மாதினியார் இவர்திருவயிற்றி லவதரித்தவர் திலகவதியார்-இவர்பின்பிறந்தவர்மருணீக்கியார், புகழனார்மருள்நீக்கியார்க்குச் சகலகலைகளும்படிப்பித்தார், சடங்கெல்லாமுடிப்பித்தார்-திலகவதியார்க்குப்பன்னிரண்டுவயதில் சோழராசன்வாயில்மந்திரி கலிப்பகையார் திலகவதியாரைக்கலியாணஞ்செய்துகொள்ளப் புகழனாரிடத்தில் விருத்தரைமணம்பேச அனுப்பினார் அவர்கள் கலிப்பகையாருக்குத் திலக

வதியாரைக்கேட்கப்புகழனர் கொடுக்கச் சம்மதப்பட்டார். இதைவிருத்தர்கள் கலிப்பகைக்கறிவிக்கக்கலிப்பகைகலியாணமபண்ணவிருக்கையில், தமதரசன்மேல்வடதேசத்தரசன்பகைகொண்டபடியால், தன்னரசனுத்தரவின்படி போர்க்குப்போய்விட்டார். அப்பொழுது புகழனர் காலம்வந்திறந்தார்,

இவர்மனைவிமாதினியாரும் கற்பிலக்கணப்படியுயிர் துறந்தார் இவர்கள்பெண் திலகவதியாரும் திலகவதியார்க்குப்பின் பிறந்த மருணீக்கியாரும் திலகவதியார்க்குப்பின் பிறந்த மருணீக்கியாரும் துக்கத்தில்வீழ்ந்தார்கள். இக்கற்றுந் தாழ்ந்தார்கள் இவர்கள் மாதாபிதாவுக்குத்தருமயாககருமஞ்செய்தார்கள். யுத்தஞ்செய்யச்சித்தங்கொண்டுபோன, கலிப்பகையார் வீரசொர்க்கஞ்சேர்ந்தார், இதையறிந்ததிலகவதியாருயிரைவிடத்துணிந்தார். மருணீக்கியார் விசனமடைந்து உடற்பிறந்தார்பாதத்தைப்பணிந்தார்-திலகவதியார் தம்பியார்வார்த்தையுந்தள்ளாமல் ஒருவரையும்விவாகஞ்செய்துகொள்ளாமல் உயிரோடிருந்தார் - மருணீக்கியார் கருமங்களைவிட்டுத் தருமங்களைமேலிட்டுச்செய்துவந்தார், இவர்சைனசமயத்தைச்சார்ந்து - வேதாகமசாத்திரங்களிற் றேர்ந்துசுனிகூர்ந்துவாழ்கையில் அவர்கள்தருமசேனரென்றபேர் கொடுத்தார்கள் தருமசேனர்சைன சமயத்தினின்று புத்தர்களைவாதினல் வென்று கீர்த்தியுமனைப் பூர்த்தியுமடைந் திருக்கையில், சைவசமய சிரோமணியாகிய திலகவதியார் கெடிலந்திக்கு வடகரையில் திருவதிகை வீரட்டானத்திற் சேர்ந்து சிவனைப்பணிந்து திருப்பணி விடைகள் செய்துதம்முடையதம்பி மருணீக்கியார் இருளுமருளுமுடைய சைனமதத்தில் வீழ்ந்து ஆழ்ந்து கிடக்கிறதைக்கண்டு சஞ்சலங்கொண்டு சுவாமியைத்துதிக்கச் - சுவாமி திலகவதியார் சொப்பனத்தில்வந்து உம்முடைய தம்பியார் சைவசமயத்திற்றிரும்புவார் இதையே விரும்புவாயென்றுசொல்லி, மருணீக்கியாருக்குச் சூலைநோயை யுண்டாக்கினர்.

தருமசேனரைச் சூலைநோய்வருத்துகையில் சைனர்கள் மந்திரதந்திரங்கள்செய்துஞ், சூலைநீங்கவுமில்லை, வாங்கவுமில்லை சூலையதிகமாய்விளைந்து மதனுலுளைந்தும் இறவாதுயிர்வைத்திருந்து உடற்பிறப்பாகிய திலகவதியாருக்காளனுப்பினர். அவன் திலகவதியாரைக்கண்டு உமது தம்பியார்க்குச் சூலைநோய் கண்டிருக்கின்றது, தீரும்வகை சொல்லுக்களென்னத் திலகவதியார்சிவசந்நிதியில்வந்தால் தீருமென்றுசொல்ல, அவனதைக்கேட்டுத் தருமசேனருக்குச் சொல்ல அவர்சைனசமயம்விட்டொருவருமறியாமல், திருவதிகையில் திலகவதியாரிடத்தி

ல், வந்துபணிந்தார். திலகவதியார் திருநீறுதரித்துப் பஞ்சாக்கரமோதிச் சிவசந்நிதியிற் கொண்டுபோய்விட்டார்.

தருமசேனர், சுவாமிக்குமுன் பூமியில்விழுந்து எழுந்து அழுது தொழுதுநிற்கையில், சுவாமி தம்மைப்பாடென்னத், தருமசேனர், (கூற்றாயினவாறுவிலக்ககிலீர்) என்னும்பதிகத்தைப் பாடினார். சூலைநோய்பறந்தது. உடலைவிட்டுத்துறந்தது. இவர்துதித்து மதித்துப் புகழ்ந்து மகிழ்ந்து இருக்கும் வேளையில் திருவீரட்டத்தில் சுவாமியருளால் உமக்குத் திருநாவுக்கரசென்று நாமந்தந்தோமென்றசரீரிவாக்குப் பிறந்தது. சைனசமயம்பாழாகவும், மீளாகவுஞ் சிவனடியார்கள், கூறினார்கள். திருநாவுக்கரசரைத்தொழுது மீண்டார்கள். கொல்லுதலும் பொய்சொல்லுதலுமில்லாச சமணர்கள்கூடித் தருமசேனர் சூதாய்ப்போனதை நாடிப் பாடலிபுத்தூர்ப் பல்லவராசனாகிய, காடவர்கோனிடத்திற்குப்போய், நம்முடைய சமயத்தில்வந்த தருமசேனர், தம்முடைய சமயத்திற் போய்விட்டாரென்று அரசனுக்கறிவித்தார்கள், அரசன் ஆசாரியர்களை வரவழைத்து நம்முடைய சமயம்விட்டுத் தம்முடைய சமயத்திற்போன, தருமசேனனை யென்னசெய்யலாமென்ன, ஆசாரியர்கள் ஆக்கினை செய்யலாமென்றார்கள். அரசன்மந்திரிகளால் தருமசேனனைவரவழைத்துச் சுண்ணாம்புகாளவாயில் வைக்கும்படி கட்டளையிட்டான் - அவன்கட்டளைப்படி காவலாளர்செய்தார்கள்.

திருநாவுக்கரசு சுவாமிகள், (மாசில்வீணையும்) என்ற பதிகத்தைப்பாடித் தாயனைப் பொய்கையில், நீராடுவதுபோல விளையாடியிருந்தார். ஏழுநாள் அவர் சிவனைத்தொழுது வருநாளில், பல்லவராசன் சுண்ணாம்பறையைத் திறக்கச்சொன்னான், காவலாளர்திறந்து திருநாவுக்கரசுசுவாமி யுயிரோடிருக்கக்கண்டு - அதிசயித்துக்கொண்டு அரசனுக்குச்சொல்ல, அரசன் ஆசாரியர்கள்சொற்படி தருமசேனனை விஷத்தோடு பாற்சோறூட்டிக் கொல்லுங்களென்ன அவர்கள் திருநாவுக்கரசர்க்கு விஷங்கலந்த பாற்சோற்றைக்கொடுக்க அவருண்டு உயிர்கொண்டு சிவனைத்துதித்திருந்தார், இதைக்காவலாளர்கள் பல்லவராசனாகிய காடவர்கோனுக்குச் சொல்ல, அவனாசாரியர்சொற்படி யானையைவிட்டுக்கொல்லென்னக், காவலாளர்கள் யானையைவிடத் திருநாவுக்கரசு பரமசிவத்தைக்குறித்து, (சுண்ணவெண்சந்தனச்சாந்து) என்னும் பதிகத்தைப்பாடினார். யானை திருநாவுக்கரசரை வலமாகவந்து தாழ்ந்து வீழ்ந்து பணிந்து துணிந்து அவர் திருவடியைத் தனதுமுடியிலணிந்துபோயிற்று, இதைக்கண்ட காவலாளர்கள் அரசனுக்கறிவிக்க அரசனாசாரிகள் சொற்படிக்குத் தருமசேனனைக் கருங்கல்லிற்கட்டிக் கடலிலே தெட்டிடுங்களென்றான்-காவலாளர் அரசன்சொற்படி கல்லிற்

கட்டிக் கடலிற்றள்ளினார்கள். திருநாவுக்கரசு சுவாமிகள் (சொற்றுணை வேதியன்) என்னும்பதிகத்தைப் பாடியருளினார்.

அப்பொழுது கல்லுமிதந்தது. அக்கல்லைத்தெப்பமாகக்கொண்டு பாதிரிப்புலியூர்த் துறையிலேவந்தார். சிவனடியார்கள்வந்து திருநாவுக்கரசரை வணங்கினார்கள், திருநாவுக்கரசர் அத்தலத்துச் சுவாமியைக் குறித்து (ஈன்றாளுமாயெனக்கெந்தையுமாய்) என்னும்பதிகம்பாடித் திருவதிகைத்தலத்தில், வந்துபணிந்து திருமாணிகுழியென்னுந் தலத்தையும் - தினைநகரென்னுந்தலத்தையும் வணங்கிக் கெடிலநதியைத்தாண்டித், திருக்கூட்டத்தோடு திருவீரட்டானக் கடவுளைப்பாடி, வழிபட்டிருக்கையில், பல்லவராசன் சைனமதத்தைநீக்கிச் சைவமதத்தை நோக்கித் திருநாவுக்கரசரைக்கண்டு துதிசெய்துகொண்டு, பாடலிபுத்திரநகரில், சமணர் கோயில்களையும் மடங்களையும், இடித்துக்கொண்டு வந்து திருவதிகையில் குணதரவீச்சரமென்னும் கோயிலைக்கட்டுவித்தான், அந்நாளில் திருநாவுக்கரசர், திருவதிகையடுத்த, திருவெண்ணெய்நல்லூர்-திருவாமாத்தூர்-திருக்கோவலூர்-இவைமுதலியவைகளைக் கண்டு பெண்ணாடகமென்னுந் தலத்திற்குப்போய்த் திருத்தூங்கானை மாடமென்னுந்தலத்திற்பாடி இருதோளிலும்பூதத்தால், இடபமுத்திரையுஞ்சூலமுத்திரையும் - பெற்றுத்திருவரத்துறை - திருமுதுகுன்றூர் இவைகளைத்தரிசித்து சிவாவென்னு நதிகடந்து சிதம்பரத்தில்வந்து நடன சபையைக்கண்டு (பத்தனாய்ப்பாடமாட்டேன்) என்னும் பதிகத்தைப்பாடி - உழைவாரப்பணிவிடைசெய்து திருவேட்களம் - திருக்கழிப்பாலை - இத்தலங்களிற்போய்(வனபவளவாய்திறந்து என்னும் பதிகம்பாடிச்சிதம்பரத்தில்வந்து(அரியானை) என்னும்பதிகம் பாடி வணங்கியிருக்கையில், சிவனடியார்களால் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமியின்மகிமையைக் கேள்விப்பட்டு, அவரைக்காணும்பொருட்டுத், திருநாரையூர்க்கு வந்து திருப்பதிகம்பாடிச் சீகாழிசமீபத்தில்வந்தார்.

திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள வாகீசரவதாரமாகிய திருநாவுக்கரசுசுவாமிகள் அன்பினாலுருகி அடியார்கள்கூட்டம் பெருகிவருகிறதைக்கண்டு அப்பரேயென்று திருவாய்மலர்ந்தார். திருநாவுக்கரசு சுவாமிகளும் அடியேனென்று திருவாய்மலர்ந்தார் இருவருங்கலந்து திருக்கோலக்காவிற்போய்த் திருத்தொண்டுசெய்தார்கள் திருஞான சம்பந்தசுவாமிகள் திரும்பினார். அப்பர்சுவாமிகள் - திருக்கருப்பறியலூர் - திருப்புன்கூர் திருநீடூர்-திருக்கொறுக்கை திருநீலையூர் திருநனிப்பள்ளி திருச்செம்பொன்பள்ளி-மாயூரம் திருத்துருத்தி திருவேள்விக்குடி எதிர்கொள்பாடி திருக்கோடிக்கா திருவாவடுதுறை இன்னும் பலதலங்க

ளிலுந் திருத்தொண்டுசெய்து திருப்பதிகம்பாடிவந்தார் பின்னுந்திருவிடைமருதூர் திருநாகீச்சரம் திருச்சந்திமுற்றம் திருநல்லூர் திருக்கருவூர் திருவாரூர் திருப்பாலைத்துறை-திருப்பழனம் முதலியதலங்களைக்கண்டு திருத்தொண்டுசெய்து திருப்பதிகங்கள்பாடி அப்பூதியடிகள் வாழ்ந்திருக்குந் திங்களூரிலேவந்தார்.

அப்பூதியடிகள் தம்முடையபிள்ளைகளுக்குஞ்செய்யுந் தருமங்களுக்குங் கருமங்களுக்கும், திருநாவுக்கரசுசுவாமிகள் நாமம்வைத்திருக்கிறதைக்கண்டு அப்பர்சுவாமிகள் அப்பூதியடிகள் திருமனைக்கு வெழுந்தருள அப்பூதியடிகள் எதிர்கொண் டழைத்து அமுதுகள்சமைத்துத தங்குமாரர் திருநாவுக்கரசை வாழைக்குருத்தறுத்து வரச்சொல்ல அப்பிள்ளை வாழையிலையறுக்கும்போது அககுருத்திலோர் பாம்பிருந்துதீண்டப்பிள்ளை குருத்தறுத்துத் தாய்கையிற்கொடுததுத் தன்னைப்பாம்புதீண்டித்தென்று கீழேவிழ நாயனாரு மனைவியாரும் பிள்ளையைமறைத்து அப்பனைநோக்கி யமுதுகொள்ளுமென்று சொன்னவுடனே சுவாமியருளால் பிள்ளையிறந்ததையறிந்துகொண்டு(ஒன்றுகொலாமெனப்)பதிகம்பாடிப் பிள்ளையையெழுப்பினார். அப்பர்திருவமுதுசெய்து திருப்பழனத்திற்கெழுந்தருளித் தேவாரம்பாடித் திருத்தொண்டு செய்திருந்தார் பின்பு திருவாரூருச் கெழுந்தருளிச் சிலநாளிருந்து திருப்புகலூரிலே முருகனார்மடத்திலெழுந்தருளித் திருஞானசம்பந்த சுவாமிகளெதிரே வந்து வணங்கத்தாமும வணங்கிததிருவீழி மிழலையி லிருவரும் வந்திருக்கையில் பஞ்சககாலமுண்டாயிற்று சுவாமி இருவருக்குமிரண்டு பொற்காசு பலிபீடத்தில்மேற்குங் கிழக்குமாக வைக்கிறோ நீங்களெடுத்துச் சிவனடியார்களுக்கமுது படையுங்க ளென்று அநுக்கிரகம் பண்ணினார். இருவருமப்படிச்செய்தார்கள்.

பின்பு திருமறைக்காட்டி லெழுந்தருளுகையில் திருக்கோயிற் கதவடைக்கப்பட்டிருந்தது திருஞானசம்பந்தர் அப்பரே யிக்கதவுதிறக்கப்பாடுமென்ன, அப்பர்பாடப் பதினோராம்பாட்டிற் கதவுதிறக்கப்பட்டது.

அதன்வழியிற்போய்ப் பதிகம்பாடிச் சுவாமியைக்கொண்டாடி அப்பர்சுவாமிகள் திருஞானசம்பந்த சுவாமிகளைப்பார்த்து அடைக்கப்பாடச் சொன்னவுடனே அவர்பாட, முதற்பாட்டிலே கதவடைக்கப்பட்டது-அப்பர்கிலேசப்பட்டரு நித்திரைசெய்கையில் சுவாமி சொப்பனத்தில்வந்து நாம் திருவாய்மூரிலிருப்போம்-நீர் வாருமென்றுசொல்ல அப்பர் பின்னேவரச் சுவாமிமுன்னேபோய்க் கோயிலிற்புகுந்தருள- அப்பரும் அவ்விடந்திறந்தோடா - இதைக்கேள்விப்பட்டுத் திருஞானசம்பந்தரும்வந்தார், மதுரையில் பாண்டியன் மனைவி மங்கையர்க்கரசியா

ர் கட்டளைப்படி மந்திரிகுலச்சிறைநாயனார் திருஞானசம்பந்தரை ய ழைத்துக்கொண்டு வரும்படி தூதனைவிட்டார்- அவர்களழைக்கத் திரு ஞானசம்பந்தர் புறப்பட்டப்பவரையழைக்க-அவர் சைனர்கள் கொடிய வர்கள் வரமாட்டோமென்று சொல்லி அப்பர்நீரும்போகவேண்டாமெ ன்றுதடுக்க அப்பருக்குச் சமாதானஞ்சொல்லித திருஞானசம்பந்தசு வாமி மதுரைக்கெழுந்தருளினர்.

அப்பர் வேதாரணியம்விட்டு நாகையைத்தரிசித்து வட தளியென் கிற கோயிலிற்றிருமூலையில் சமணர்கள் பொய்க்கோயிலென்ன அ ப்பர்சகியாமல் வருந்திப்பரமசிவத்தைத்தொழப் பரமசிவனார் சோழரா ஜன் கனவில்வந்து நம்மையப்பர்வணங்கும்பொருட்டு சமணர்களையழி த்துஇவ்வூரைவிட்டுததுரத்தென்ன. அரசனவர்களையழித்துவிட்டான் பின்பு அப்பர் திருக்கூட்டத்தோடு திருவானைக்காவு என்றும்பியூர்ம லை திருச்சிரப்பள்ளி - கற்குடி திருப்பராய்த்துறை. இவைகளை நதொ ழுது திருப்பைஞ்ஞீலுக்குவந்து பசியடைந்திருக்கையில் சுவாமி பிரா மணராய்க் கட்டமுதெடுத் தப்பருக்குமுன்வந்து இளைப்பாயிருக்கிறீர் இக்கட்டமுதைபொசியுமெனக்கொடுக்க, அவர்வாங்கிப்பொசித்தார்.

பிராமணர்அப்பரை நீரெங்கேபோகிறீரென்ன, அப்பர்திருப்பை ஞ்ஞீலிக்கென்றுசொல்லப்பிராமணர்தாமுமவருவேனென்றுடன் போ னார். சுவாமிமறைய அப்பர்சுவாமிபாடித் திருவண்ணாமலைக்குப் போய் த், திருப்பணிவிடைசெய்து, திருவோத்தூரைத்தொழுது காஞ்சீபுரத் திற்கெழுந்தருளி, யேகாம்பரநாதனைப்பாடித் திருக்கழுக்குன்றம் - தி ருவான்மியூர் - திருமயிலை - திருவொற்றியூர் திருப்பாசூர் - திருவால ஙகாடு - திருக்காளத்தி- ஸ்ரீசைலம் இவைமுதலாகிய தலங்களைத்தெரி சித்துப்பலதேயங்களையுங்கடந்து நடந்துகைலாயத்திற்குப் போக மன ங்கொண்டு காலாலுங்கையாலும் மார்பாலுநடந்து அவைபவங்கள்தே ய்ந்தும் உருண்டும்பிரண்டும்போய்க்கிடந்தனையானார் சுவாமி அப்பர் சுவாமியின் பத்தியைக்கண்டு முத்திகொடுக்க, ஒருபிராமணனாய்வடி வெடுத்து, அங்குஒருதடாகமுண்டாக்கி, அப்பர்சுவாமியைப்பார்த்து நீரெங்கேபோகிறீரென்ன அவர்கைலாயம் போகிறேனென்றார், சுவா மி நீகைலாயஞ்சேரமாட்டாய் திரும்பிவிட்டேன் - அப்பர்உன்னுயிர் போனாலுந்திரும்பேன் கைலாயத்திற்கேசெல்லு வேனென்னச் சுவா மி யந்தரத்தில்மறைந்து - அப்பரே, நீரிந்தத்தடாகத்தில்மூழ்கும் உம் மைத்திருவையாற்று வாவியிலெழும்பும் - அங்கேகைலாயக்கோலங்கா ணுவாயென்று அசரீரிவாக்காகச்சொல்லச், சுவாமிதிருவாக்கின்படி த டாகத்தில் விழுந்து முழுகித் திருவையாற்றுத் திருக்குளத்தில்அவயவ ங்களோடெழுந்து பார்க்கையில், திருக்கைலாயம் போற்கண்டு சுவா

மியைத்தரிசித்துச்சிலகாலமிருந்து. திருப்பூந்துருத்திக் கெழுந்தருளு கையில் - திருஞானசம்பந்தமூர்த்தி மதுரைக்குப் போய்பாண்டிய னுக்குச் சுரநோய்தீர்த்துக் கூனிமிரசசெய்து அக்கினியிலேடுபோட்டு வைகையாற்றி லெதிரேடுவிட்டு எண்ணாயிரஞ்சமணர்களைக்கழுவிலேற றித் திரும்பிமுத்துச்சிவிகையில் வருகையில் அப்பர்சுவாமிகள் ஒருவ ருமறியாப்த தோள்கொடுத்தார், அதன்பின்புதிருஞானசம்பந்தசுவாமி கள் திருநாவுக்கரசுசுவாமிகளெங்கேயென்ன அப்பர்சுவாமிகள் இங்கே பணிவிடைபுரிகின்றேனென்றார், திருஞானசம்பந்தர்முத்துச்சிவிகை விட்டிறங்கி அப்பர் திருவடியில் விழ - அப்பர் அவரடியைத்தொழஒரு வரை யொருவர் தொழுது ஆநந்தமடைந்தார்கள்.

திருநாவுக்கரசு மதுரை முதலிய தலங்களைத் தேடிச் சேவித்துத் திருப்பதிகம்பாடிக் கொண்டாடித் திருப்பு கலூரி லெழுந் தருளித்தி ருப்பணிவிடை செய்திருக்கையில் சுவாமிசோதனையால்அப்பர் புல்லு ச்செதுக்கையில் கண்டவிடமெல்லா நவமணிகளாக விருந்தன-அவை களிலிச்சையற்றிருந்தார்- தேவலோகத்திலிருந்து சிலதெய்வப்பெண்க ள்வந்துவீணைமுதலியன வாசித்துப் பாடியாடிப்பிரியப்படுத்த -அப்பர் அவர்களைப்பாராமல் நிருவிகாரியாயிருந்தார் - பலசோதனைக் குடன்ப டாமலு மனங்கெடாமலுஞ் சிலகால மிருந்துசித்திரைமாதத்தில் சதய நட்சத்திரத்தில் (புண்ணியனே யுன்னடிக்கே போதுகின்றேன் பூமபு கலூர்மேவியபுண்ணியனே)என் றுயாத்திரைப்பத்துப்பாடிச்சிவலிங்கத் திலே ஐக்கியமானார். திலதவதியாருஞ் சிலநாளிருந்து பணிவிடைசெய் து வகலாயஞ்சேர்ந்தார்,

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# குலச்சிறைநாயனார்சரித்திரம்.

——(✱)——

தென்பாண்டிநாட்டில்கடம்பவனக்காட்டிய்திருப்பரங்கிரிசார்மது ராபுரியார்மணன்மேற்குடியில்வாழும்குலச்சிறைநாயனார்வேதாகமசாத் திர புராணங்கள்யாவுந்தெரிந்தவர், பாதகங்களிற்பிரிந்தவர்-சிவனடியா ர்களைத்தொழுகின்றவர் - பத்தியின்மேன்மேலா வெழுகின்றவர் - பஞ் சாட்சரவிபூதி ருத்திராட்சங்களைநீக்காதவர் - முப்பத்திரண்டு தருமங் களையும்போக்காதவர்-இரவும் பகலும்பரமசிவத்தைச் சிந்திக்கிறவர் தி

ருத்தொண்டர்புகழைவந்திக்கிறவர் - பாண்டியராசனுக்கு வான்முறையாகமுதன்மந்திரிபட்டம்பெற்றவர் - மாற்றரசர்களைப்போரில்வென்றுசெற்றவர்-நற்குணங்கள்யாவுமுற்றவர் - துர்க்குணங்கள்யாவுமற்றவர்-சிவபூசைதுறந்தார்-சிவசந்நிதிக்குவேண்டுவனகொடுத்து நடாத்திச்சிவனைவழிபட்டுவருநாளையில், பாண்டியமகாராஜன் மதிகெட்டுச்சமணர்மதத்தினுட்பட்டுச்சிவனையிகழ்ந்துபுத்தனைப்புகழ்ந்துநிற்கையில்குலச்சிறைநாயனாரும், பாண்டியராஜன் தேவியாரும் அரசனையறியாமல்மறைவாகச் சிவபூசைசெய்திருக்கையில் பாண்டிமாதேவியுத்தரவால், திருஞானசம்பந்த மூர்த்திகளைக்கொண்டு எண்ணாயிரஞ்சமணர்களைக் கழுவிலேற்றிச் சைவசமயத்தை நிலைநாட்டுவித்த சமயத்தைப்பஞ்சுபோற்பறக்கும்படியோட்டிப் பரமசிவத்தினிடத்தத்தி பந்தபத்தினைவைத்துச் சிவபுண்ணியராய்ச்சிலகாலமிருந்துகைலாயஞ்சேர்ந்தார்.

திருச்சிற்றம்பலம்.

ல

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பெருமிழலைக் குறும்பநாயனார் சரித்திரம்

---*---

ஆழ்ந்த கடல்சூழ்ந்த பூமியில், நிலவளங்களும் பலவளங்களும் பொருந்திய மிழலைநாட்டில் பெருமிழலை யென்னுமூரில் தலைமைபெற்ற நிலைமையுடைய குறும்பநாயனாரொருவரிருந்தார். இவர் சிவனடியார்கள் ஒன்றைக் கேட்குமுன்னே குறிப்பறிந்து தவிபண்ணுகிறவர், அவர்களைச் சிவனாக மனதிலெண்ணுகிறவர் - திருத்தொண்டர்களுக கழுதுசெய்துசாழ்ந்துநிற்கிறவர் - சிவபுண்ணியமேபெரிதெனச் செய்துவாழ்ந்துநிற்கிறவர் - சுந்தரமூர்த்திசுவாமிகள் பாதங்களை மனதிற்பதிக்கிறவர் - பரமசிவத்தைப் பலகாலுந்துதிக்கிறவர் - இதனாலே அஷ்டமாசித்தியிற் கைதேர்ந்தவர் சைவசமய நிலையிலேசார்ந்தவர் - மணிடைவிட்டொளிநீங்காத தன்மையைப்போலுங் கனலைவிட்டுப் பசுநீங்காதன்மையைப்போலும் பெருமிழலைக் குறும்பநாயனார் சாம்பசிவமூர்த்தியிடத்தும், சுந்தரமூர்த்தியிடத்தும் அன்புமபத்தியும் விடாதிருந்தமையால் சுந்தரமூர்த்திசுவாமிகள் திருக்கைலாயஞ்சேர எழுந்தருளுகிறார் என்கிற செய்தியையறிந்து மனம்-புத்தி-சித்த-மகங்கார மின்னான்கு மொன்றுபட்டு அறிவொன்றுமேமேற்பட்டுப், பிரமநாடியின்வழியிற் கருத்தைப்போகவிட்டுக் கபாலமூலாந்தரந்திறக்க மெய்ஞ்ஞானஞ்சிறக்க ஆன்மாவிறக்கத் திருக்கைலாயஞ்சேர்ந்தார்.

திருச்சிற்றம்பலம்.



பெருமிழலைக்குறும்ப

நாயனார்



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# காரைக்காலம்மையார் சரித்திரம்.



சமுத்திரக்கரையிலே காரைக்கால் என்னும் பட்டணத்திலே தன் வணிகரினத்திலே தனத்திலே குலத்திலே மிகுந்தவராகிய தனதத்தனென்றவர் தவப்பலனால் புனிதவதியார் பிறந்தார். இவர் வளர்ந்துவருகையில் செல்வம்பெருகையில் தலைமுதகிபெறச் சிவபத்தியில் மிகுதியானார். சிவபத்தர்களைக்கண்டால் நேசமாகவும் பாசமாகவும் விசுவாசங்கொண்டு தொழுவார் - அவர்கள் பாதங்களில் விழுந்தெழுவார் - புனிதவதியார் பாக்கியமார் தாங்கிச் சூழ்ந்துவர வாழ்ந்துவருகையில் திருநாகையிலிருக்கும் வணிகர்குலத்திற்பிறந்த நிதிபதியின்பிள்ளை பரமதத்தனுக்குப் புனிதவதியாரை விவாகஞ்செய்தார்கள் - தனதத்தன் தன்மகளுக்குத் தன்வீட்டருகிலொருமாளிகை கட்டிக்கொடுத்துச் சீதனமெல்லாங் குறைவறக்கொடுத்தார், பரமதத்தனும் புனிதவதியாரும் வாழ்ந்திருக்கையில் பரமதத்தன் வியாபாரம்பண்ணுமிடத்தில் மாம்பழமில்லாக் காலத்தில் ஒருவனிரண்டுமாம்பழங்கொடுக்க, அவர்வாங்கிவீட்டிலனுப்பினார், அவற்றைப் புனிதவதியார்வாங்கிவைக்க, அன்றுதினத்தில் ஒரு சிவபத்தர் அமுதுபொசிக்கவந்தார்.

புனிதவதியார் வந்தவருக் கன்னம்படைத்துக் கறியமுதில்லாமையால், அதற்குப் பதில்மாம்பழம்படைக்க அவர்பொசித்து எழுந்தருளினார், அதன்பின் பரமதத்தன்வந் தமுதுசெய்கையில் மனைவியார் பழம்வைக்க, அவர்புசித்து மற்றப்பழங்கேட்கப் புனிதவதியார் சிவனேயென்றுகையேந்த சுவாமியருளால் ஒருபழங்கையில்விழ, அதைமனைவியார் நாயகர்க்குப்படைக்க அவர்புசித்து இது அதிகமதுரமென்றுசொல்லப், புனிதவதியார் சிவன்கொடுத்தபழமென்று நடந்ததைச் சொல்ல, அவர்பொசித்துச் சிவன்பழந்தந்தாராகில், இன்னுமொருபழந் தாவென்றுகேட்க மனைவியார் சிவனே என்மொழி பொய்யாகிறதே யென்று கையேந்தி மற்றுமொருபழங்கேட்க, அதுகையில்வந்து சிவனருளால்விழ நாயகருக்குப்படைத்துப் புனிதவதியார்நின்றார். புருஷன்கையில்வாங்கின பழங்காணமற்போயிற்று.

பரமதத்தன்கண்டு பயங்கொண்டு இவள் தெய்வமே மனுஷியல்லவென்று தொடாமல் காலங்கழித்துச் சிலகாலஞ்சென்று கப்பலேறி வியாபாரஞ்செய்து பாண்டியதேயத்தில் கன்னிநாட்டில் ஒருபட்டினத்திலிறங்கி வேறொருபெண்ணை விவாகஞ்செய்துகொண்டு ஒரு பெண்குழந்தையைப் பெற்றுப் புனிதவதியார்பெயரிட்டு வாழ்ந்திருக்கையில் இச்செய்தியைக்கேள்விப்பட்ட தனதத்தன் புனிதவதியாரை முத்துச்

சிவிகையிலேற்றி இனத்தாரை யழைத்துக்கொண்டு பரமதத்தனிடத்தி ற்போனான். அதையறிந்து பரமதத்தன் மனைவியையும் பெண்குழந் தையையும் அழைத்துப் புனிதவதியாரெதிரில்வந்து பெண்குழந்தை யைப் புனிதவதியார் திருவடியில்வளர்த்தித் தானுமனைவியுங் காலில்வி ழுந்தார்கள். பரமதத்தனைச் சுற்றத்தாரிப்படிச்செய்யலாமாவென்ன அ வர் இவரை மானிடவடிவமென்றெண்ணாதீர்கள் யாங்கள் பணிந்ததைத ப்பற்றி யோசனைபண்ணாதீர்கள் தெய்வீகமென்று அணியுங்கள் நீங்க ளும்விழுந்து பணியுங்கள், என்றுமுன்னடந்த அற்புதங்களைச்சொ ன்னான். புனிதவதியார்கண்டு இந்தவுடலம் புருஷனுக்கு வைத்திருந் தோம் இனியென்னசெய்யவென்று வெறுத்துப் பரமசிவனாரைக் குறி த்துச் சிந்தித்து வந்தித்துச் சரீரத்தைஉதறத் தசையெலாம்விழுந்து பேய்வடிவமானார்.

நாமுஞ்சிவகணத்தி லொன்றென்று, திருவந்தாதி பாடியதைக்க ண்ட சருவரும்பயந்து பணிந்தார்கள் புனிதவதியார் அங்கிருந்து கை லாயத்திற்கும் போவோமென்று வடதிசைநோக்கிக் கைலையைமிதி யேனென்று காலைத்தூக்கித் தலையாலேநடந்து வனங்கடந்து வெள்ளி மலையேறிவருகிறதைப் பார்ப்பதியார்பார்த்து வருகிறவாரொன்று ப ரமசிவனாரைக்கேட்க-சுவாமி பசிக்கமுதுகொடுத்த அம்மையாரென்று சொல்லி அம்மைவந்தீரோவென்னப் புனிதவதியார் அப்பாவந்தேனெ ன்றார். உமக்குவேண்டிய தென்னவென்னத் தேவர் திருவடிக்கீழிரு க்கச் சுவாமி திருவாலங்காட்டிற் போவென்றுசொல்லத் தலையாலேந டந்து திருவாலங்காட்டில்வந்து (கொங்கைதிரங்கி) என்னும் பதிகம் பாடி நடேசர் திருவடியின் கீழே கையிலே தாளம்பிடித்துக் கீதம்பா டிக்கொண்டிருக்கப்பெற்றார். காரைக்கா லம்மையாராகிய புனிதவதி யார்.

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அப்பூதியடிகள்நாயனார்சரித்திரம்.

திங்களூரிலேபிராமணவமிசத்திற்பிறந்தவர் - அப்பூதியடிகள்நாய னார். சிவனடையாளம்பெற்றுச்சிவனடியாரைவழிபட்டுச்சிவபூசைசெ ய்துசிவபத்தருக்குஅன்னதானமுதலியன் செய்துவருகையில், திருநா வுக்கரசுசுவாமிகளுடைய அற்புதங்களைக் கேள்விப்பட்டு வீடு-மாடு-நா

டு-காடு-மடந் தடாகஞ் சோலை-சாலை- செய்தருமஞ்செய்கருமம் எல்லாம் திருநாவுக்கரசு சுவாமிகள் பெயராலென்றெழுது வித்திருக்கிறதைத் திருநாவுக்கரசராகண்டு அப்பூதியடிகளை, திருமனைக்கெழுந்தருளிவினவ அப்பூதியடிகளவரைவணங்கிவீற்றிருக்கச்செய்து திருவமுது சமைத்து, அவர்க்குப் படைக்கத்தம்முடைய குமாரர் திருநாவுக்கரசனை வாழையிலை யறுக்கச் சொல்லப்பிள்ளை யிலையறுக்கையில்குருத்திலிருந்து பாம்பு கடித்து இறந்தது. திருநாவுக்கரசர்கண்டு விஷந்தீரப்பாடிப் பிள்ளையை யெழுப்பிஅவர்திருமனையில் திருவமுதுபுசித்துப்போக அப்பூதியடிகளவரைவழிவிடுத்து முன்னிருந்த பத்தியிலும் பின்னிருந்தபத்தி வளர்ந்தேறச் சிலகாலமிருந்துசிதம்பரத்தில்வந்து தாண்டவராகியஆண்டவரைத் தரிசித்தும் அருச்சித்தும் சிவகதியடைந்தார்.

திருச்சிற்றம்பலம்.

* * *

௨

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருநீலநக்கநாயனார் சரித்திரம்



பொன்னிநாட்டில் சாத்தமங்கையிலிருக்கும் அந்தணர் குலத்தில வதரித்தவர் - திருநீலநக்கநாயனார் திருத்தொண்டர்களுக்கு அன்ன சொர்ன்னமுதலானவைகொடுத்தருளி ஐவந்தியீச்சுரரைக்காலந்தோறுஞ் சிலங்கொண்டுமனைவியுடனெனுகூலமாகப்பூசித்துவருநாளிலொருநாள் சிவலிங்கத்தின் அங்கத்தின்மேல் ஒருசிலம்பிப்பூச்சிவிழுந்தது. அதைக்கண்டிருந்த திருநீலநக்கநாயனார்மனைவியார் சுவாமிதிருமேனியில் சிலந்திப்பூச்சிவிழுந்ததற் கொப்புளமாமெதி தன்னின்றத்திருமென் வாயால்ஊதினார் திருநீலநக்கநாயனார்பார்த்து என்னேடிசுவாமிதிருமேனியின்மேல் அசுத்தஞ்செய்தாய்என்று வெறுத்துமறுத்துப் பின்னும் பூசைமுடித்துமனைவியாரைத்தள்ளிவிட்டுப்போனார், அவர்மனைவியார் திருச்சந்நிதியில்சுவாமி துதியினின்று ஒருபக்கத்தில் துக்கப்பட்டிருந்தார். ஐவந்திநாதர்திருநீலநக்க நாயனார் கனவிலேவந்து உம்முடைய மனைவியார் ஊதினபக்கம் பொக்குளமில்லாமலும் ஊதாதபக்கம் பொக்குளமாகவுமிருக்கிறதைகாட்டினார் - அதைக்கனவிற்கண்டநாயனார், நினைவிற்கொண்டன்பும்பத்தியும் விசுவாசமுமிரக்கமுமுடையவராய்த்தம்முடையதேவியாரையுங் கூட்டிக்கொண்டு வீட்டில்வைத்து நித்தியபணிவிடைகளுந் தப்பாமற் செய்துவந்தார். இப்படியிருக்குநாளையில்திரு

ஞானசம்பந்தசுவாமிகளெழுந்தருளத்திருநீலநக்கநாயனாரெதிர்சென்று தம்முடையகிரகத்தில்வரவழைத்துத்திருவமுதளித்துஉபசாரமெல்லாஞ்செய்தார். திருஞானசம்பந்தர்திருக்கலியாணஞ்சேவித்துமனைவியுந்தாமுஞ்சிவலோகஞ்சேர்ந்தார்கள்.

திருச்சிற்றம்பலம்.

*

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# நமிநந்திநாயனார்சரித்திரம்

சோழவளநாட்டில் ஏமப்பேறூரில் மறையவர்குலத்தில் அவதரித்தவர்-நமிநந்தியடிகள்நாயனார், இவர் சிவனைவழிபட்டுச் சிவனடியார்களுக்கன்னமிட்டுத் திருவாரூரில் தியாகேசர்சந்நிதானத்தில் திருவிளக்குகளுக்கு நெய்வார்ப்பார், தீபமழுங்காமற் பார்ப்பார், சந்நிதிக்குவிளக்கேற்ற ஒருநாள்ஒருசமணன்வீட்டில்விலைக்கு நெய்கேட்டார், சமணன் உங்கள் சுவாமிக்குத் திருவுளமுண்டானால் தண்ணீர்வார்த்தெரிக்கலாகாதோவென்றான். நாயனார் அதைக்கேட்டுத்துன்பப்பட்டு நெய்வாங்காமல்விட்டுப்பொழுதுபோயிற்றே தீபவேளையாயிற்றேயென்றுசிவசந்நிதியின்முன்சென்று தியாகராசப்பெருமானைச் சேவித்துநின்று சமணன் சொன்னதை அறிக்கைபண்ணினார், சிவனை யன்புடன் துதிபண்ணினார்,

அப்பொழுதுசுவாமிநம்துகமலாலயமாகிய திருக்குளத்துநீரைமுகந்து திருவிளக்குவைக்க அசரீரிவாக்காகத்திருவருள் செய்தார் நமிநந்தியடிகள் உகந்துநீரைமுகந்துதீபமேற்றினார்எரிகிறதைக்கண்டுபோற்றினார் அங்குச்சிலநாளிருந்துபைங்குனிஉத்திரத்தில்மணலியெழுச்சியில் வந்துசுவாமியைத்தரிசித்துத் தீண்டலாயிற்றென்று புறத்திண்ணையில்தூங்குகையில் கடவுள்கனவிலேதோற்றப்பட்டுத் திருவாரூரிலே வந்தவர்களும் பிறந்தவர்களும் எவ்வுயிர்களுஞ்சிவசாரூபமென்று காண்பித்தார். அதுகண்டுநமிநந்தியடிகள் திருவாரூரிலேதானே கிரகங்கட்டிக்கொண்டு சிவபணிவிடைகள் செய்திருந்து அடையுங்காலத்தில் திருக்கைலாயபதவியிலடைந்தார்,

சோழவளநாட்டில்சீகாழியென்னும்பட்டினத்தில் பிராமணர்கள் வமிசத்தில் கௌணியர்கோத்திரத்திற் பிறந்தவர் சிவபாதவிருதையார்

இவர்திருநனிப்பள்ளியிற் பிறந்தபகவதியாரை விவாகம்பண்ணித்தண்ணீரிலிருந்து புத்திரன்வேண்டுமென்று செபதம்பண்ணுகையில் சீகாழிக்கடவுள் கருணைகடாட்சத்தால் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிதிருவவதாரமானார். பிள்ளைக்கு வயதுமூன்றானபின் பிராதக்கிருத்தியகன்மஞ்செய்யப்போகையில்பிள்ளை பின்தொடரப்பிதாமறுக்க அவர்வருவேனென்ற உடனழைத்துக்கொண்டுபோய் அவனைக்கரையில்வைத்துத் தாஞ்சலத்துள்மூழ்கிச் செபதபஞ்செய்கையில் பிள்ளை பிதாவைக் காணமல் சீகாழிக் கடவுள் கோயிலைப்பார்த்து அம்மா அப்பாவென்றழுதது சுவாமி திருவுளத்திரங்கிப் பார்ப்பதியுடனிடபவாகனத்தில்அந்தரத்தில் வந்துஉமையவளைப்பார்த்துத் திருஞானசம்பந்தரழுகிறார் அவருக்குப்பொற்கிண்ணத்தில் ஞானமிழதத்துடன் திருமுலைப்பாலூட்டுமென்று சொல்லியபடிக்குப் பார்ப்பதியார் எழுந்தருளிப் பிள்ளையார் நாசியைச்சிந்திக் கண்ணீர் துடைத்து ஞானமிர்தமூட்டிக் கிண்ணத்தைக் கையிற்கொடுத்து அப்பா அழாதேயென்று இடபவாகனத்திலேறிச் சுவாமியுடன் தேவியார்போகச் சிவபாதவிருதையார் செபதபமுடித்துப் பிள்ளையாரிடத்துவந்து கையிலும் வாயிலு நெஞ்சிலும் பாலுஞ்சோறுமிருக்கக்கண்டு இப்படிச்செய்ததாரென்று சிறுகோல் கொண்டடித்தார்.

திருஞானசம்பந்தமூர்த்தி சீகாழியப்பனை விரலாற்சுட்டிக் காட்டித்தேவாரம்பாடினார். அப்பொழுது சிவன்திருக்கோயிலெழுந்தருளக்கண்டு பிள்ளையாருமெழுந்தருளிச் சிவசந்நிதியிற்போய் அம்மையும் அப்பனும இங்கிருக்கிறார்களென்று எல்லாரும் அதிசயிக்கப்பதிகம் பாடிக் கிரகத்தில்வந்து தாயாரைவணங்கி மறுநாள்திருக்கோலக்காவிற் கெழுந்தருளவேண்டுமென்னத்தாதை தோளிலெடுத்துக்கொண்டுவர, அதுகண்டு அப்பட்டினத்தாரெதிர் சென்று, போயக்காண, இவர்சந்நிதியிற்கைதட்டிக்கொண்டாடினார், சுவாமிகைகள் சிவந்தனகண்டு திருவுளம்புரிய இரண்டு பொற்றாளங் கையில்வந்திருந்தன, அவற்றைக் கொட்டி ஆனந்தக்கூத்தாடினார்- பின்சீகாழிக் கெழுந்தருளிய செய்தியைத் தாயார்திருவவதாரஞ்செய்த திருநனிப்பள்ளியார் கேட்டுவந்து கூட்டிக்கொண்டு போனார்கள் - அப்படியே தாதையார், திருத்தோளிலெழுந்தருளித் தலங்களெங்கும் போய்ப் பதிகம்பாடிச் சீகாழிக்கு வந்தார். அப்பொழுது விவாகக்கலை தீர்த்தெருக்கதம் புலியூரிலிருக்கும்- திருநீலகண்டயாழ்ப்பாணனார் அவர்மனைவிபாடினியாரிருவரும் வந்துசந்தித்தார்கள், அவர்களுடன் சிதம்பரத்திலெழுந்தருளிய பொழுது தில்லைமூவாயிரவரும் கணநாதவடிவா யிருக்கிறதைக் கண்டுயாழ்ப்பாணருக்குக்காண்பித்தார்.

பின்புறுக்காணிமாடத்தையும் திருநெல்வேலியிலேயும் கண்டுடந்து திருவடிநோக்கதனால் மாறன்பாடியிற றக்கினார். சுவாமிதிருவாத்துறைத் தலத்தாருக்குச் சொப்பனத்தில்வந்து தமதுசந்நிதிமுத்துச்சிவிகை முத்துக்குடை சின்னங்கள் இவைகளைத் திருஞானசம்பந்த சுவாமிகளுக்குக்கொடுத்து அழைத்து வாருங்கவென்றார். திருஞானசம்பந்தர்க்கும் இவையெல்லாம் வருகின்றன வென்று சொப்பனஞ்சாதித்தார், அவர்சொப்பனங் கண்டுபிதாவுக்கும் திருக்கூட்டத்தாருக்குஞ் சொன்னார் அப்படியே விடிந்துவரக்கண்டு ஏறிக்கொண்டு சந்நிதிக்குவந்து திருப்பதிகம்பாடினார், அதன்பின் சீகாழிக்குவந்து உபநயன முடித்துச் சகலகலைகளும்படித்து இற்கையில் திருநாவுக்கரசு சுவாமிகள் எழுந்தருள எதிர்கொண்டழைத்துவந்து வந்தனஞ்செய்திருந்து அவர்போன பின்பு மேற்றிசைத் தலங்களையும் வடதிசைதலங்களையுங்கண்டு துதிசெய்து கொண்டு சம்பந்தசுவாமியும் அவர்பிதாவும் யாழ்ப்பாணரும் திருக்கூட்டமும் வருகையில் திருப்பாச்சியில் கொல்லிமழவன் என்னுமரசன்மகள் முயல்கநோல்தீராயல், கோயிலிற் கிடக்கக்கண்டு பதிகம்பாடித்தீர்த்தார். கொங்குநாட்டில் திருச்செங்குன்றூரில் திருக்கூட்டத்தாருக்குக் குளிருஞ்சுரமும் பதிகம்பாடித் தீர்த்தார். தென்றிசைத் தலங்களைக்கண்டு வருகையில் திருப்பட்டீச்சுரருளால், சிவகணங்கள் முத்துப்பந்தல் பிடிக்க-த் திருவாவடுதுறையில்வந்து பதிகம்பாடிப் பலிபீடத்திற் சிவகணங்கள் உலவாககிழிவைக்க அதையாக முடிக்கச் சீகாழிக்குக் கொடுத்தனுப்பினார். தருமபுரத்தில்வந்து பாடியபதிகங்களை யாழிலேற்று வாசித்தார்-திருமருகலிம விஷந்தீண்டப்பட்ட செட்டியைம்பதிகம்பாடி யெழுப்பிக் கலியாணமுடிப்பித்தார்.

திருவாரூர்க்குவந்து சிறுத்தொண்டர் திருநீலநக்கர் முருகனார் முதலிய திருத்தொண்டர்கள் கூட்டத்துடன்கூடியிருக்கையில் திருநாவுக்கரசர் வந்துகூடினார். திருநாவுக்கரசும், சம்பந்தரும்திருவீழிமிலையிற் பதிகம்பாடிப்பலிபீடத்திற் பொற்காசு பொற்றமுதளித்தார்கள். வேதாரணியச் சந்நிதிக்கதவு திறக்கவு மடைக்கவும் பாடினார்கள். சுவாமி திருநாவுக்கரசரைத் திருவாயமூரில்வரச்சொல்ல அவருஞ்செல்லச் சம்பந்தருமுடன்போக மதுரையில் பாண்டிமாதேவி மங்கையர்க்கரசியார் உத்தரவின்படி குலச்சிறைநாயனார் திருஞானசம்பந்தருக்காளனுப்பச் சம்பந்தர் வந்தவர்கள் செய்திகேட்டு மதுரைக்குவரப் பாண்டியன் மந்திரியாகிய குலச்சிறைநாயனார் பரசமயக்கோளரி திருஞான சம்பந்தர்வருகிற திருச்சின்னவோசைகேட்டு மங்கையர்க்கரசி யாருடன் எதிர்கொண்டுவந்து முத்துச்சிவிகையில் வந்ததிருஞானசம்பந்தரை வணங்க அவர் வாழ்ந்திரு க்கயாவெனத் தேவர்திருவடிகண்டதே பா

ண்டியரும் பாண்டிநாடும் நாங்களுஞ் சுகமடைந்தோமென்றார்கள்.

உங்களுக்குச் சோமசுந்தரக்கடவுள் துணையாவாரென்றாசீர்வதித்தவுடன், குலச்சிறைநாயனார் ஒருமடாலயம்விட்டுத் திருஞானசம்பந்தசுவாமிகளைத் திருக்கூட்டத்தோ டெழுந்தருளச்செய்து சகலமுநடப்பித்தார் - சமணர்களறிந்து பாண்டியனுக்கு இச்செய்தியைச் சொல்லித் தாங்கள் கண்டு முட்டியென்றார்கள். பாண்டியன் தான்கேட்டு முட்டியென்றான். பின்பு அரசன் என்னசெய்யலாமென்னச் சமணர்கள்மடத்திலே நெருப்புப்பிரவேசிக்க மந்திரஞ்செய்கிறோமென்றார்கள், பாண்டியன் கட்டளைப்படி மந்திரித்து மடத்தில் அக்கினி பற்றாமையாலே தங்களுக்கு அவமானம் வருமென்று மடாலயத்திலே தீமூட்டினார்கள். திருக்கூட்டத்தார் விழித்துத் தீயை அவித்துத் திருஞானசம்பந்தசுவாமிகளுக்கறிவித்தார்கள் அவரறிந்து, மங்கையர்க்கரசி மங்கிலியம்வாழ்கவென்று பதிகம்பாடினார். பாண்டியனுக்குச் சுரநோய்சம்பவித்தது - சமணர் மணிமந்திரவிழ்தங்களாலுந் தீராமையால் மங்கையர்க்கரசியார் தம்முடைய நாயகராகிய பாண்டியராசரிடத்துவந்து பணிந்து என்னுயிர்த் துணைக்கணவரே சீகாழியிலிருந்து தெய்வீகத் தன்மையுடைய பிராமணச்சிறுபிள்ளை வந்திருக்கிறது அதுவீற்றிருக்கும் திருமடாலயத்திலே சமணர்கள் அக்கினியைப்போட் டெரித்தார்கள் அந்நெருப்பாகும் உம்மைப்பற்றியசுரநோய் அவரிங்குவருவாராகில், சுரந்தீர்ந்துபோம் என்றுசொல்லப் பாண்டியர்மகிழ்ந்து அவரையிங்குவரவழைப்பாயென்ன மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும் திருஞானசம்பந்தர் திருமடாலயத்திற்போய்ச் சுவாமிமுன்வணங்கிக் கைகட்டி வாய்புதைத்துநிற்கையி லவர்பயப்படாதீர்கள் சமணரை வாதில்வென்று பாண்டியர் விபூதியணியும்படி செய்விக்கிறோமென்ன மந்திரியும் இராசபத்தினியும் சமணர்கொளுத்தின தீயானது பாண்டியர்க்குச சுரத்தீயாகப்பிடித்தது, தீர்க்கும்படி எழுந்தருளுங்கள் சுவாமியென்னத் திருஞானசம்பந்தசுவாமிகள் திருக்கூட்டத்துட னெழுந்தருளிப் பாண்டியன் அரண்மனையிடத்தில்வந்து பொற்பீடத்திருந்தார். பாண்டியன்கண்டு களிப்படைந்து இவர்பார்க்கட்டுமென்ன அப்போது சமணர்கள் அவரொருபுறமும் நாங்களொருபுறமும் பார்த்துத்தீர்க்கிறோமென்றார்கள். திருஞானசம்பந்தரிசைந்து மதுரைச்சிவாலயத்திலிருந்து திருநீறுகொண்டுவரச்சொல்லி (மந்திரமாவது நீறென்று) பதிகம்பாடிப்பாண்டியன் வலப்பக்கத்தி லணிய வலப்பக்கச்சுரமெல்லாம் இடப்பக்கத்தில்வந்தது. சமணர்கள் மயிலின் பீலிகளாலேமந்திரித்து மதிகம்வருத்தமுண்டாகப் பாண்டியன் அவர்களைப் போவென்றுசொல்லித் தி

ருஞானசம்பந்தசுவாமிகளையே பார்க்கும்படி கேட்டுக்கொள்ளச் சம்ப
ந்தர் இடப்பக்கத்திலும் விபூதிபோடச் சுரநோய்போய்த் தேகங்குளி
ர்ந்தது.

பாண்டியன் சமணர்களே நீங்கள் தோற்றீர்களே யென்னவவர்க
ள் அக்கினியிலேடுபோட்டு வெல்லோமென்றார்கள். சம்பந்தர் திருப்
பதிகத்திருமுறைகொண்டு வாச்சொல்லி ஒரேடெடுத்து அக்கினியிற்
போட அதுவேவாதிருந்தது. சமணர்களக்கினியிற்போட்டவேடு சாம்
பலாயிற்று. பாண்டியன் முதலானவர்கள் அதிசயப்பட்டார்கள். சம
ணர்கள் தண்ணீரிலும் ஏடுவிடவேண்டுமென்றார்கள். பாண்டியனவ்க
த்தான். குலச்சிறைநாயனார் வாதிலும் அக்கினியிலும் தோற்றீர்கள்
இப்பொழுது நீரில் ஏடுவிடுகிறோமென்கிறீர்கள் நீங்கள் தோல்வியு
டைந்தால், என்னபந்தயமென்றார் சமணர்கள் நாங்கள் தோற்பண்ட
தால் கழுவி லேறுகிறோமென்றார்கள் திருஞானசம்பந்தர். முத்துச்சி
விகையிலும், பாண்டியன்குதிரையிலும், மங்கையர்க்கரசி தண்டிகை
யிலும், குலச்சிறைநாயனார் குதிரையிலும், மற்றவர்கள் காலாலேநட
ந்தும், வைகையாற்றங்கரைக்கு வந்தார்கள்.

திருஞானசம்பந்தசுவாமிகள் பதிகம்பாடித் திருவேட்டை வை
கையாற்றில் தமது திருக்கரத்தால்விட அவ்வேடு வைகையாற்றிற்கு
எதிரிலேறி வேகத்துடனேசென்றது, சமணர்கள் விட்டபட்ட ஏடு
சமுத்திரத்திற் சேர்ந்தது, சம்பந்தசுவாமிகள் விடப்பட்ட ஏடு திரு
வேடகமட்டும் போய் நடுவாற்றிலே தங்கியது. குலச்சிறைநாயனார்
சம்பந்தர்விட்ட ஏட்டையெடுத்துச் சிரத்தில்வைத்துப் பாண்டியனி
டத்தில்வந்து, அதன்பொருளைச் சொல்லினார். பாண்டியன் கேட்ட
வளவிலே கூனது நிமிர்ந்தது. பாண்டியமகாராசன் அதிக மகிழ்ச்
சியடைந்து மந்திரியாகிய குலச்சிறை நாயனாரைப் பார்த்துச் சம
ணர் பந்தயப்படி நடத்தென்ன மந்திரி யெண்ணாயிரங்கழுமரம் வர
வழைத்துநாட்ட அதற்றில் சமணர்களேறினார்கள். திருஞானசம்பந்த
ர் முத்துச்சிவிகையில்வர, அரசன்-அரசி-மந்திரிமுதலானவர்கள் புடை
சூழ்ந்துவரச், சொக்கேசர்சந்நிதியிற்போய்ப் பதிகம் பாடிச் சிலநாளிரு
க்கையில், சீகாழியிலிருந்து சம்பந்தர்பிதாயாக முடித்துவர அவருடனே
சம்பந்தர் பாண்டியர்குலச்சிறையார் மங்கையர்க்கரசியாருங்கூடித்தெ
ன்றிசைத்தலங்களெல்லாஞ் சேவித்து இராமச்சுரத்தில் வந்திருந்தார்க
ள் ஈழநாட்டிலுள்ள தலங்கள்யாவுந்தரிசித்துக் குலச்சிறையார்சென்ம
தேயத்தில்வந்து பாண்டியருக்குமதுரைக்குப்போம்படி கட்டளைகொடு
த்துத் திருஞானசம்பந்தசுவாமிகள் பொன்னிநாட்டில்திருவாலந்துறை
யில்தோணியேறிப்பதிகம்பாட, அதுவடகரையில்விட்டது திருநள்ளா

முதலிய தலங்களைத் தரிசித்துப் பொதும்பிலையில் வந்திருக்கையில் நந்திப்புத்தனென்னும் திருச்சின்னமடியாதேயென்று மறுக்கத் திருக்கூட்டத்தார் கோபித்துச் சொன்னவுடனே அவன் தலைதெறித்தது. சாரிபுத்தனறிந்து வாதுபேசி வெல்லவல்லமையில்லாமல் தோற்றான். அவனைச் சிவனடியாராக்கினார்.

அங்கிருந்து திருநக்கர ஊர்க்கு வந்து பணிந்து திருப்பூந்துருத்தியில் அப்பர்சுவாமிகளைக் காணவந்தார், அப்பர் சம்பந்தர் முதலானோர் செய்ததனை எல்லாங் கேள்விப்பட்டுத் தாமுங் காணவெண்ணிக் கொண்டார். வழியில் முத்துச்சிவிகைவருகையில் யாருங்காணாதபடிக்குத் திருக்கூட்டத்தொருக்கத்திற் புகுந்து தண்டிகையைத் தாங்கிவந்தார். அப்பொழுது சம்பந்தர் அப்பரெங்கேயென்னச் சுவாமி அடிமையிங்கே கொண்டு செய்கிறேனென்னச் சம்பந்தர் தண்டிகைவிட்டிறங்கி அப்பர்சுவாமிகளைப் பணிய அப்பர்சுவாமிகள் சம்பந்தசுவாமிகளைப் பணிய ஒருவரையொருவர் விசாரித்துக்கொண்டு மகிழ்ந்தார்கள். அப்பர் தெற்கே போனார். சம்பந்தர் சீகாழியில் வந்தார். பின் சீகாழி விட்டுத் திருவண்ணாமலையிற் பாடித் திருவோத்தூர்க்கு வந்தார். ஆண்பனை அங்கே பெண்பனையாகப் பாடிச் சமணரைச் சிவனடியார்களாக்கிக் காஞ்சிபுரத்தில் வந்து நீர்த்தாரம் - சோகதம் - மல்லிகார்ச்சுனம் இவை முதலிய தலங்களைத் தரிசித்துத் திருவொற்றியூரில் எழுந்தருளினார்.

அப்பொழுது மயிலாப்பூரிலிருக்கிற சிவநேசசெட்டியார் பிள்ளையில்லாமலிருந்து ஒருபெண்பிள்ளை பெற்றுப் பூம்பாவையென்று பெயரிட்டு வளர்த்து இப்பெண்ணும் என்பொருளும் சிவஞானசம்பந்தருக்கேயென்று நிச்சயித்துவருங்காலையில் பூம்பாவையார் எழுவயதில் மலர் கொய்யப்போனவிடத்திற் சர்ப்பந்தீண்டப்பட்டிறந்தார். இவர் மாதா பிதாக்கள் வருந்தியழுது மகளைத் தகனஞ்செய்து அதன் எலும்புஞ் சாம்பலும் ஒருகுடத்திலடைத்துப் பத்திரமாய்த் திருஞானசம்பந்தசுவாமிகளுக்கு நியமித்ததால் அவர்க்கே ஒப்பிப்போமென்று வைத்திருந்தார்கள்.

இதைக்கேள்விப்பட்ட திருஞானசம்பந்தர் திருமயிலைக்கு எழுந்தருளச் சிவநேசவணிகர் எதிர்கொண்டழைத்துவந்து நடந்ததெல்லாஞ்சொல்ல, அவர் பூம்பாவையார் அங்கத்தைக் கொண்டுவாருங்களென்னச், செட்டியார் கொண்டுவந்து வைக்க ஞானசம்பந்தர் பதிகம்பாட எட்டாம்பாட்டில் பூம்பாவையார் பன்னிரண்டு வயதுப்பெண்ணாக வெழுந்திருந்து திருஞானசம்பந்தர் திருவடிகளில் விழுந்து பணிந்து நிற்கையில் கண்டவர்களெல்லாரும் அதிசயப்பட்டார்கள். சிவநேசர் சம்பந்தரை வணங்கிப் பெண்ணையொப்புக்கொள்ளுமென்றார். அவர் தமக்கு யோக்கியமல்லவென்னச் செட்டியார் பெண்ணை வளர்த்து வருகையிற் சிலநாளுஞ்

சென்று சிவத்திலேக்கியமானார். பூம்பாவையார் சம்பந்தர்சீகாழிக்குவந் தபோதுஇவர்இனசனங்கள், திருநல்லூரிற்பெண்விசாரித்துவிவாகமு டிப்பிக்கத் திருமணக்கோலத்துடன் திருஞானசம்பந்தரும் பத்தினி யாரும் திருநல்லூரில்சிவசந்நிதியிற் சேவிக்கஎழுந்தருளினார்கள் அப் பொழுதுமாதாபிதாமுதலான இனசனங்களும் பின்னாலே தரிசித்தவ ரச் சிவசந்நிதியிலேநின்று நமச்சிவாயப்பதிகம்பாடி முடித்துப்போற்றி நிற்கையில் சிவாலயமுங்கோபுரவாயிலும்அண்டவெளிமட்டு மளாவிநி ற்கக்கண்டமாத்திரத்தில் அதிலொருதிருவாயிலானதுதோற்றப்பட இ துவேசமயமென்று திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் நீலநக்கர்• முருகனார் யாழ்ப்பாணர்முதலான திருத்தொண்டர்களையும்அவர்கள்பத் தினிமார்களையும், பந்துசனங்களையும்பார்க்கவந்தவர்களையும்யாவரையு ம் அந்தத்திருவாயிலிலேவிட்டார். அதன்பின் தாமும்பெண்ணுமாகயா த்திரைப்பத்துப்பாடி அக்கினிப் பிழம்பிலேஎழுந்தருளினார். அங்கிருந் தவர்கள்காணுமற்போனார்கள்.

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## ஏயர்கோன்கலிக்காமநாயனார்சரித்திரம்.



சோழவளநாட்டில் பெருந்திருமங்கலத்தில் ஏயர் கோன் வமி சத்தில் அவதரித்தவர் - கலிக்காமநாயனார் இவர்சிவனைத் துதித்துச் சிவனடியார்களை மதித்து அவர்களுக்கு அன்ன தானஞ் சொன்ன தானமுதலான எல்லா வுதவிகளையுஞ் செய்து நித்தியம் பத்தியாகந டந்து சோழமகாராசன் வாசற் சேனாதிபதியாய் வாழ்ந்து வருங் காலத்தில்திருவாரூரில் சுந்தரமூர்த்தி பரவைநாச்சியார் பிணக்குத் திரு ம்படிக்குப் பரமசிவனைத்தூது விட்டாரென்று கோபங்கொண்டு அ வரைப்பார்க்கலாகாதென்றிருந்தார் இருவரையும் ஒருமைப்படுத்தும்ப டிச் சுவாமிக்குத் திருவுளமிருந்தது - சுந்தரமூர்த்திசுவாமிகளுக்கும்ப ரவைநாச்சியாருக்குங் குண்டை யூர்க்கிழவர் நித்தியவிருத்தி செலவுநடப் பித்துக்கொண்டிருந்தார் அவ்வாறுசிலகாலநடந்துவருகையில் மழையி ல்லாமையால் செந்நெல்விளைவில்லாமற் போயிற்று - அதனால் வேளா ளர்குலத்துக்கிழவனார் துக்கமிக்கவடைந்து பொசிப்பில்லாமல் நித்தி ரைசெய்கையில் சுவாமிசொப்பனத்தில்வந்து குபேரனாலுமக்கும்பொ

ற்குவியல்களு நெற்குவியல்களும் விடெங்கு நிறையுமென்று திருவருள்செய்தார். அவர் விழித்துப்பார்க்கையில் எல்லாத்திரவியங்களுநிறைந்திருந்தன, சுந்தரமூர்த்திசுவாமிகள் சுவாமியைக்குறித்து நெல்லுவேண்டுமெனப்பதிகம்பாடினார் சுவாமி அவர்சொப்பனத்தில்வந்து குண்டையூர்க்கிழவனிடத்திலே நெல்வாங்கிக்கொள்ளுமென்று திருவருள்செய்தார்.

சுந்தரர்குண்டையூர்க்குவருகையில், குண்டையூர்க்கிழவனெதிர்வந்து நடந்த செய்தியெல்லாஞ்சொல்லிச் சுவாமிகொடுத்தநெல்லை அடியேனெடுத்துப் போடக்கூடாதாகையால் அந்தநெற்குவியல்கள் திருவாரூரில் வந்துசேரும்படிக்குத் திருவருள்புரிய வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தார். சுந்தரர்திருக்கோளிலித்தலத்தில் சுவாமியைக்குறித்துக் குண்டையூர் நெல்லைத் திருவாரூருக்கு எடுத்துக்கொண்டுபோக ஆளில்லையென்று பதிகம்பாட, அதுகேட்டுச் சுவாமி பூதங்களைக்கொண்டெடுப்பிக்கிறோமென் றசரீரிவாக்காகச்சொல்லினார். அதுகேட்டாரூரர் திரும்பினார் அன்றிராத்திரியில், நெற்குவியல்கள் பூதங்களால் திருவாரூரெங்குநிறைந்தன, பொழுதுவிடிந்துபரவைநாச்சியார்கண்டு அவரவர்கள் மனையிலிருக்கின்றநெற்களை அவரவ ரெடுத்துக்கொள்ளுகிறதென்று முறைசறைவித்தா, அப்படியே யெடுத்துக்கொண்டார்கள் நாட்டியத்தான்குடியிலிருக்குஞ் சோழராசன் திருவாயலிற்சேனாதிபதியாகிய கோட்புலியார்சுந்தரமூர்த்தியைத் தரிசித்துத் தமதூர்க்கவலா யெழுந்தருளச்செய்து நவமணிபாசனங்கொடுத்துச் சோடசோபசாரமும்பண்ணித் தம்முடைய குமாரத்திகளாகிய சிங்கடியாரையும், வனப்பகையாரையும், அழைத்துக்கொண்டுவந்து சுந்தரர்திருவடியிற்றொழும்படிசெய்து சுவாமியிப்பெண்களை அடியேன்பிழைக்கும்படிக்குக் கொண்டருளுமென்னச் சுந்தரர்பெண்களைக் கண்மணிகளாகக்கொண்டுமடிமேலெடுத்துச்சிமோந்துவேண்டுவனகொடுத்துச் சிவசந்நிதியிற்போய்க் கோட்புலியாரைச் சிறப்பித்துத் தம்மைச் சிங்கடியப்பனென்று பதிகம்பாடினார்.

பின்திருவாரூர்க்குவந்து பங்குனியுத்திரத்தில் திருவிழாவருகையில் பரவையாருக்குப்பொன்வாங்கிக்கொடுக்கத் திருப்புகலூருக்கெழுந்தருளிச் சிவசந்நிதியிற் றிருப்பதிகம்பாடி மடத்திலெழுந்தருளியிருக்கையில் சிவனருளால் நித்திரைவந்தது, அப்பொழுது சிலபரிசாலகர் செங்கல்லுக்களைத் தலையணையாகக்கொடுக்கச் சுந்தரர் வாங்கிவைத்து மேற்போர்த்திருந்த வெண்பட்டையவற்றின்மேல்விரித்துநித்திரைசெய்தார் சுவாமிகனவில்வந்து, உமக்குத் தலையணையாகவிருக்கின்றசெங்கற்களைப்பொன்னாகத்தந்தோமென்ன அவர்விழித்துப்பார்க்கையில் க

ற்களைப்படியேதங்கவடிவாகவிருந்தன அவைகளை ஆட்களைக்கொண்டெடுப்பித்துப் பரவையாருக்கனுப்பினார்.

திருப்பனையூர்-வீழிமிழலை-திருவாஞ்சியத்தான்குடி -அரிசிற்கரைப்புத்தூர் நறையூர் - திருச்சித்தீச்சுரம் திருவாவடுதுறை - திருவிடைமருதூர் - திருநாகீச்சுரம்-திருக்கலயநல்லூர் - திருக்குடமூக்கு திருவலஞ்சுழி திருநல்லூர் - திருச்சோற்றுத்துறை - திருப்பழனம் திருவையாறு-திருநெய்த்தானம் திருப்பூந்துருத்தி திருவாலம்பொழில் திருமழபாடி-திருவானைக்காவு-இவைமுதலிய தலங்களைத்தேடிப்பாடித் திருப்பாச்சிலாச்சிரமத்திற்பாடச் சிவனருள்செய்யாதிருக்க, மற்றுஞ் சிவமில்லையோவென்றுபாடச், சுவாமிசிலதிரவியமருள்செய்ய, அவைகளையெடுப்பித்துக்கொண்டுதிருமுதுகுன்றத்திற்பாடிச் சுவாமியால் திரவியம் பெற்று அத்திரவியங்களையெல்லாம பரவைநாச்சியார் கிரகத்திற் கொண்டுவந்து தரவேண்டுமென்றுபாடச் சுவாமியணிமுத்தாற்றிற் போட்டுத்திருவாரூர்க்கமலாயக்குளத்திலெடுத்துக்கொள்வாயென்னச் சுந்தரர் மச்சம் வெட்டிக்கொண்டு மணிமுத்தாற்றிற் போட்டுவிட்டுத்திருவாரூர்க்கெழுந்தருளிப்பரவையாரையழைத்துக்கொண்டு பெண்ணேநமக்குத்திருமுதுகுன்றத்திற் சிலதிரவியங்கிடைத்தன அவற்றை மச்சம்வெட்டிக்கொண்டு மணிமுத்தாற்றிற்போட்டுவந்தேன் அவற்றைக்கமலாயக்குளத்திலெடுப்போமென்னப் பரவையார் புன்னகைகொண்டுநிற்கச் சுந்தரர்பதிகம்பாடிக் கமலாயக்குளத்தில் இறங்கித்தேடி அகப்படாதிருக்க எட்டாம்பாட்டிற் றிரவியங்களகப்பட்டன.

அவற்றைப் பரவையாருக்குக் கொடுத்தார். திருவாரூர்க்குவடக்கே குருகாவூரிலேயெழுந்தருளுகையில் நடுக்காட்டில் சிவன்பிராமணனாகத் தண்ணீர்ப்பந்தல்வைத்துச் சுந்தரருக்குக் கட்டமுதிருக்கிறதென்று கொடுக்கத், தாமுஞ் சிவனடியார்களும் பொசித்து இளைப்பாறியன்றிரவிலங்குநித்திரைசெய்து பொழுதுவிடிந்து பார்த்துத் தண்ணீர்ப்பந்தலுமில்லை திருக்கச் சிவன்செயலென்றுபாடிக் குருகவூரிற் சிலநாளிருந்து திருக்கச்சூரி லெழுந்தருளிப் பதிகம்பாடிப் பசியாலிளைப்படைந்து கோபுரவாயலிலிருந்தார். சிவன் யோகிவடிவாகித் திருவோடெடுத்து ஊரிற்பிச்சைவாங்கி யன்னங்கொண்டுவந்து சுந்தரரே யிளைப்பாயிருக்கிறீர் இதைப் புசியுமென்றுகொடுக்க, அவர்வாங்கித திருக்கூட்டத்தோடு பொசித்துத் திரும்பிப்பார்க்கையில் யோகிமாயமாக இதுவுஞ்சிவனருளென்று பதிகம்பாடிக் காஞ்சிபுரத்தில் தரிசித்துத் திருவொற்றியூரிலெழுந்தருளித் திருப்பதிகம்பாடித் திரும்புகையில் அந்நாட்டில் ஞாயிறுஎன்றவூரில் ஞாயிறுகிழவனென்கின்ற வேளாளர் மனைவியார் திருவயிற்றில் அனிந்திதையார்வந்து அவதாரஞ்செய்து

சங்கிலிநாச்சியாரென்னுந் திருநாமம்பெற்று மிகவுமலங்காரமாக வளந்திருந்தார்.

சங்கிலிநாச்சியார் பருவபக்குவமானதால் அநேகர் பெண்கேட்க வந்தார்கள், அதுகண்டு சங்கிலியார் மயங்கிவிழுந்தார் மயக்கந்தீர்ந்தபின்பு மாதாபிதாக்கள் ஏன்மயங்கிவிழுந்தாயென்ன என்னை விவாகஞ்செய்து கொடுக்கப்போகிறீர்களென்று மயங்கிவிழுந்தேனென்றார். அவர்களதென்னவென்னச் சங்கிலியார் ஒற்றியூர்த்தியாகர் என்னைவேறொருவருக்கு மனைவியாகத் திருவுளம்பற்றி யிருக்கிறாரென்றுசொல்ல, இருவரும்பயந்தென்னசெய்யவேண்டுமென்னச் சங்கிலியார் தாம்போய்த் திருவொற்றியூரில் சிவபணிவிடை செயயவேண்டுமென்ன, மாதாபிதாமுதலிய வினசனங்கள் சங்கிலியாரைச் சந்நிதியிற்கொண்டுபோய்க் கன்னிமாடத்துள் வைததுப் பாங்கிமார்சூழ்ந் தேவல்செய்யவாழ்ந்திருக்கப்போனார்கள் சங்கிலியார் காலையுமாலையுமலர்கொய்து சிவபணிவிடைசெய்திருக்கையில், சுந்தரசுவாமிகள் சந்நிதியில்வந்து சிவதரிசனைசெய்து திருப்பதிகமபாடித் திருமண்டபத்தில் திருக்கூட்டத்துடனெழுந்தருளினார். அதுகண்டு சங்கிலியார் திருமண்டபத்திலிருந்து திரைநீக்கிவந்து சுந்தரசுவாமிகளைவணங்கி யுடனேதிரைக்குள்ளே புகுந்தார் சுந்தரர்கண்டு விதிப்படிமதிமயங்கி யிப்பெண்ணைப் பெறும்படிச் சிவனைக்குறித்துப் பதிகம்பாடினார்.

அன்றிராத்திரியில் சுந்தரருக்குச் சங்கிலிநாச்சியாரை மணமுடிப்பிப்போமென்று சொப்பனஞ்சாதித்தார். பின்புசங்கிலியார் சொப்பனத்தில்வந்து சுந்தரமூர்த்தி சுவாமிகளை யுமக்குக் கணவனாகமணமுடிப்பிப்போமென்றார். சங்கிலியார் சுவாமி அவரென்னைவிட்டுப் போகேமென்று உண்மைசொன்னால் சம்மதியென்ன அதற்குச் சுவாமி உம்மைவிட்டுப் பிரியாதிருக்கச் சத்தியஞ்செய்து தருவாரென்னச் சங்கிலியாருடன்பட்டிருக்க மற்றுஞ்சுவாமி சுந்தரரிடத்திற்போய்ச் சுந்தரரேமணம்பேசிவந்தோம் அவளுக்குச் சபதஞ்செய்து தரவேண்டுமென்ன, அப்படியே செய்வேன் தேவரீர் திருச்சந்நிதிவிட்டு மகிழமாத்தடியிலெழுந்தருளவேண்டுமென்னச் சுவாமிசம்மதித்துச் சங்கிலியாரிடத்துவந்து சுந்தரரை மகிழமாத்தடியிற் சத்தியஞ்செய்து தாருமென்று கேளென்னக் சுவாமி மகிழமாத்திலெழுந்தருளினார், சங்கிலியார் விழித்தெழுந்து தாதிமார்களுக்குத் தாங்கண்ட சொப்பனமெல்லாஞ்சொல்லினார், சந்நிதியில்சத்தியஞ்செய்யவந்த சுந்தரரைச் சங்கிலியார் தாதிமார்கள் சந்நிதியிற் சத்தியஞ்செய்யவேண்டா மகிழமாததடியில் சத்தியஞ்செயயென்றார். சுந்தரர் சங்கிலியாருக்குச் சத்தியஞ் செய்துகொடுத்தார். அதன்பின்பு தலத்தார்விவாகஞ்செய்வித்தார்கள்.

இவர் சிலநாளிருந்து பரவைநாச்சியாரை நினைத்துத் திருவாரூருக்குச் செல்லப் புறப்பட்டார் சத்தியந்தவறினதால், இரண்டுகண்களுங்கெட்டன, தேகமெங்குங் குட்டநோய் கொண்டது, திருமுல்லைவாயிலைத் துதித்து வெண்பாக்கத்தில் சுவாமியாலூன்றுகோல் பெறறுக் காஞ்சிபுரத்தில்பதிகம்பாடி யொருகண்பெற்றார். திருப்பூந்துருத்தியில்வந்து, திருக்குளத்திலேமுழ்கிக் குட்டரோகந்தீர்த்தார் திருவாரூரிற்பாடி மற்றைக்கண்பெற்றுத் தேவாசிரியமண்டபத்திலிருந்து பரவையாரிடத்தாளனுப்பினார். பரவைநாச்சியா ரவர்களையுள்ளே வரவொட்டாது தள்ளிவிட்டார். அதுகண்டு சுந்தரர் தனித்துப் புலம்புகிறதைச் சுவாமிகண்டு வினவச் சுந்தரர் பரவையிடத்துமனிதரை விட்டேன் அவர்களைத் தள்ளிக்கதவடைத்தாள் நீர்போயிணக்கவேண்டுமென்னச் சுவாமிநம்பியார் வடிவாகப்போயிணங்க அவளுடன் படாமைகண்டு சுந்தரருக்குப் பரவை சம்மதிக்கவில்லையென்றுசொல்லச் சுந்தரர்கேட்டு இன்றிரவில் பரவையைக்கண்டா லுயிரைத்திருப்பேன் இல்லாவிடி லுயிரைவிடுவேனென்னச்சுவாமி பரவைநாச்சியார் திருவாயிலிற்சென்றுநம்முடையதோழன் உன்னிடத்தில் வரவேண்டுமென்கிறான் தள்ளாமல் வரவழைத்துக்கொள்ளென்ன பரவையார் இவர்சுவாமியேயென்று நிச்சயித்து சுந்தரரைவரவழைத்தாக், இருவருந் திருப்பள்ளித் திருமஞ்சத்தின்மேல் சேர்ந்து களிகூர்ந்தார்கள் (இக்கதைசிறக)

ஏயர்கோன் கலிக்காமநாயனாருக்குச் சூலைநோயைச்சுவாமியேவினதாலவன்வருத்தப்பட்டனதுகண்டு சுவாமியவன் கனவில்வந்து சுந்தரர் வந்தாலிந்நோய்தீருமென்றுசொன்னார், அவன் கேட்டுச்சுந்தரன்முகத்தில் விழிக்கிறதில்லையென்றான் - சுவாமி சுந்தரமூர்த்திக்குங் கனவிலே நின்று ஏயர்கோன் கலிக்காமனிட தகிற்போய் சூலைநோய்தீர்த்தருளென்றார் - சுந்தரர் நல்லதென்றுபுறப்பட்டார். அச்செய்தியைக் கலிக்காமர்கேட்டு உடைவாளெடுத்து வயிற்றைக்கிழித்துக்கொண்டார். கலிக்காமநாயனார் தேவியார் கற்பிலக்கணப்படி உயிரைவிட வெத்தனத்திருக்கையில் சுந்தரமூர்த்தியா ரெழுந்தருளினாரென்றது கேட்டெதிர்கொண்டழைத்து வந்துசுந்தரமூர்த்திசுவாமிகுத் தவிசளித்துச் சோடசோபசாரஞ்செய்து சுவாமியெழுந்தருளிய காரியமென்னவென்று வினவஏயர்கோன் கலிக்காமனைக் காணவேண்டுமென்றார். அவற்கவர் உள்ளே பள்ளிகொண்டிருக்கிறாரிதுசமயமல்ல வென்றார்களுடனே அந்தப்புறத்திலே யெழுந்தருளினார், அங்கேகடந்ததைக் கண்டியானுமிந்த உடைவாளாலே பிராணனை விட்டுக்கொள்வேனென்று அவர்கையிலிருந்த உடைவாளை யெடுத்துத் தாமும் வயிற்றைப் பீறுகையில் சிவனருளால் ஏயர்கோன் கலிக்காம நாயனார் எழுந்திருந்துடனே சுந்தர

மூர்த்திகையிலிருந்தவாளைப் பற்றிக்கொண்டார். பின்பு இரண்டுபேருக தழுவிக்கொண்டு உறவாகித் திருவாரூரிலேவந்து சிவசந்நிதியிலேயதிகமபாடி மகிழ்ந்து பலநாளிருந்து சிவனடியார்க்கேவல்செய்துவயர்கோன் கலிக்காமநாயனார் கைலாயத்தைஅடைந்தார்.

திருச்சிற்றமபலம.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருமூலதேவநாயனார்சரித்திரம்

திருக்கைலாயத்தில் பிரமன்-விஷ்ணு-தேவேந்திரன் முதலியதேவர்களுக்குத் திருவருள்செய்யும் நந்திகேச்சுரர் கருணைகடாட்சம்பெற்ற யோகிகளிலொருவர் பொதியமலைக்கு எழுந்தருளிய பொழுது கேதாரம் மல்லிகார்ச்சனம் · திருக்காளத்தி-திருவாலங்காடு - காஞ்சீபுரம் திருவதிகை-சிதம்பரம் இவைகளைச்சேவித்துப் பொன்னி நாட்டில் சாத்தனூரில்வந்தார். அவ்வூரில்திருமூலக்கோனென் றோரிடையன் பசுமேய்க்கையில் சருப்பந்தீண்டப்பட்டிறந்தான். அதுகண்டு அவன்மேய்த்தபசுக்கூட்டங்களெல்லாம்பிணத்தைவிட்டுநீங்காதுசூழ்ந்துதுள்ளித் துடித்துக்கதறித் தவிக்கின்றதையோகீச்சுரர்கண்டு இப்பசுக்களுடைய துன்பங்களைத் தீர்க்கவேண்டுமென்றெண்ணித் தம்முடைய சரீரத்தையாருமறியாமற் காப்பாற்றி இடையன் சரீரத்திற் பிரவேசமாயெழுந்திருந்தார். பசுககளெல்லாந்துயர் நீங்கித் திருமூலக்கோனென்றுநாவினால்நக்கி மகிழ்ந்திருந்தன, அவர் பசுக்களை மேய்த்துச் சாத்தனூரில்வந்து பசுககளவரவர் வீடுகளிற்செல்ல இவர் பொதுமடத்திலெழுந்தருளினர, அப்பொழுது திருமூலக்கோனார் பெண்சாதியும் பிள்ளைகளும் வந்தழைக்கையிற் பேசாதிருந்தார். அவர்கள் மிகவுமனங் கலங்கிநிற்கையில் அங்கிருந்தவர்கள் இவர்க்குப்பைத்தியமல்லமற்றும் வேறு செய்கையல்ல சிவத்திலே சித்தவிருத்தி நிற்கின்றதென்றார்கள் அது கேட்டுமனைவியுமக்களுஞ் சென்றார்கள் பின்பு அவர்பழைய சரீரத்தைக்காணாமையால் அவ்வுடலோடு திருவாவடுதுறையிற் சேர்ந்து பரமசிவனைவணங்கி மூவாயிரவருடமிருந்து சிவனருளியவேதாகமப்பொருள்களைச் செந்தமிழால் மூவாயிரமாலை பாடியோகத்திலிருந்து கைலாயஞ்சேர்ந்து பரமசிவனைப்பிரியாதிருந்தார்.

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# விறற்றண்டியடிகணாயனார்சரித்திரம்.

சோழவளநாட்டில் திருவாரூரில் சந்தமானவர் - முகநோக்கமில்லாமல் அகநோக்கமுடைய பிறவிக்குருடர் - சிவசிந்தையகலாதவர். அ

வஞ்சனைபுகலாதவர் - சிவபணிவிடையிற் சிறந்தவர் சித்தவிருத்தியிலே துறந்தவர் - பஞ்சாக்கரத்தியானஞ்செய்து சிவனைவழிபட்டுவருநாளில் ஒருநாள் சிவாலயத்திற்கு மேற்காகத் திருக்குளத்தைச் சுற்றிச் சமணர்கள் பள்ளிகளிருந்தன, அவைகளால் அக்குளம் அசுத்தங்கொண்டிருந்தது அக்குளத்தைத் திருத்திசெய்ய விறற்றண்டியடிகள் துணிந்து குளத்துக்குள்ளே யொருதறு நாட்டி யதிற்கயிறுகட்டிக் கரைப்புறத்திலு மொருதறிநாட்டியதிலுங் கயிறுகட்டிக் கூடையு மண்வெட்டியு மெடுத்துத்தாமே மண்ணைவெட்டிச் சுமந்து கொண்டு கயிற்றின்வழியே தடவிக் கண்டுவந்து கரையிற் போடுவார், இதைக்கண்டிருந்தசமணர்கள் ஓ விறற்றண்டி மண்ணைவெட்டினால் மண்ணிலுள்ள சீவசெந்துகளிறந்துபோம் வெட்டாதே யென்றுவிலக்க அவரதைக் கேளாமல் வெட்டிச் சுமக்கையில் சமணர்கள் கண்கள்தாங் கெட்டிருக்கின்றன, காதுகளுங் கேளாமையிடை பட்டுக்கெட்டிருக்கின்றனவோ வென்றார்கள் விறற்றண்டியடிகள் சமணர்களே நீங்களல்லவா பொய்ச்சமயத்தை மெய்ச்சமயமென்று துணிந்து அறிவுங் கெட்டுக்கண்ணுங் கெட்டு மெய்ச்சமயமாகிய சிவசமயப்பொருளைக் கேளாமல்காதுங்கெட்டுத் திரிகிறீர்களென்றார். பின்னும்நான் கண்காணப்பெற்றால், நீங்களென்ன வாவீர்களென்றார். அதற்கவர்கள் நீகண்பெற்றுவந்தால் தங்களூரைவிட்டுப் போவோமென்று, சொல்லிக் கூடையை மண்வெட்டியையுந் தறியையுங் கயிற்றையும் பிடுங்கியெறிந்து உங்கள்தெய்வச் செயலுண்டானால் கண்பெற்றுக்கொண்டு குளம்வெட்டவா வென்று தள்ளிவிட்டார்கள்.

விறற்றண்டியடிகள் சந்நிதியில்வந்து முறையிட்டு மடத்திற்போய் மெய்ம்மறந்து நித்திரை செய்கையில், சுவாமி கனவில்வந்து சமணர்களே கண்கெடுவார்கள். நீயே கண்பெறுவாயென்று திருவருள்செய்து அரசன்கனவிற்போய்ச் சமணர்கள் தண்டியடிகள்குளங்கல்லா திருக்கத்தடுக்கிறார்கள் அவர்களைத் துரத்தியவருக்குதவிசெய்யவென்ன அருளினார். உதயத்தில சமணர்களெல்லாங்கண்கெட்டார்கள். பின் அரசனால் துரத்தப்பட்டார்கள். தண்டியடிகள்கண்தெரியப்பட்டுத் திருக்குளம்வெட்டிச்சிவபணிவிடைசெய்து சிலகாலமிருந்து சிவலோகஞ்சேர்ந்தார்,

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# மூர்க்கநாயனார்சரித்திரம்

தொண்டைவளநாட்டில் திருவேற்காட்டில் தாளாளராகியவேளாளர்குலத்திலவதரித்தவர்-திருநீறுஉருத்திராட்சந்தரித்தவர் - பஞ்சாக்கரங்களையிச்சரித்தவர் - துட்டர்களைச்சங்கரித்தவர் - தீர்க்கமுள்ளமூர்க்கநாயனார், இவர்குபேரசம்பத்தைப்பெற்றுச்சிவனடியார்களுக்குப்பத்தி



சாக்கியநாயனார்

விசுவாசத்துடனே முக்கனிச்சருக்கரையோடு அன்னங்கொடுத்துவருகாலையில், கைலாயபதியின் றிருவருளால் பாக்கியங்குறைந்து நிர்ப்பாக்கியநிறைந்தும்முகங்கோணாமலும் அகங்கோணாமலும்; காணிபூமியாவும்விற்றுக்கிடைத்தபொருள்களைப் பெற்றுத் தருவமூதாக்கிச் சிவனடியார்களைநோக்கி யன்பாக வன்னங்கொடுத்துவந்தார். இந்நாயனார் எல்லாமிழந்து தமக்கு மன்னங்கிடையாதிருக்கத் திருக்குடந்தையில்வந்து சூதாடிவென்று அன்னங்கொடுப்போமென்று துணிந்து சிவனைப்பணிந்து முன்புசூதாடத்தோற்றுப் பின்புவென்று அடியார்களுக்கன்னங்கொடுக்கலானார் அவ்வாட்டத்தில் மாறுபாடுசெய்தவர்களையுடைவாளாற் குற்றுவார், சிவபாதங்களைத்துணையாகப்பற்றுவார், இவர் சிவனடியார்களுக் கிடுக்கண்செய்தவர்களையுஞ்சூதாட்டத்தில் வாதாட்டஞ்செய்தவர்களையும் வெட்டுகையால் மூர்க்கரென்று பெயர்பெற்று இவ்வுலகவாழ்வற்றுச்சிவபதஞ்சார்ந்தார்.

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## சோமாசிமாறநாயனார்சரித்திரம்

சோழவளநாட்டில் திருவம்பரென்னும் தலத்தில் தெய்வப்பிராமணர்குலத்தில் உற்பத்தியானவர் சகல நூல்களிலும் விற்பத்தியானவர்மாயனாவணங்குஞ்சிவனை நினைக்குஞ்சோமாசிமாறநாயனார் இவர் பரமசிவனொருவனே நித்தியகடவுளென்றும் மற்றமுக்கடவுளரெல்லாம் அநித்தியகடவுளரென்றும் அளவைப்பிரமாணங்களாலறிந்து சிவனடியார்களைப் பரமசிவனாராகவெண்ணி வந்தனைவழிபாடுபண்ணி அன்னங்கொடுத்து அன்பாகவழிவித்துவந்து திருவாரூரிலவதரித்த பரசமயகோளரியாகிய சுந்தரசுவாமி பொற்பாதங்களை இருதயகமலத்தில்வைத்துப் பூசித்தமையால் ஒள்ளிய கிரணங்களையுடைய வெள்ளியங்கிரியில் வீற்றிருக்கும் பரமசிவனது திருவடியைச்சேர்ந்தார்.

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்,

## சாக்கியநாயனார்சறித்திரம்.

திருச்சங்கமங்கையில் வேளாளர்மரபிலேபிறந்தவர்- வேதாகமபுராணசாத்திரங்களிற்சிறந்தவர் இவர்கம்பாநதிசூழ்ந்தகாஞ்சிப் பதியைச்சார்ந்து சாக்கியர்மதத்திற்சேர்ந்து அவர்சாத்திரங்களை யெல்லாமோ

ர்ந்து இதுபொய்ச்சமயமென்று மனம்பிரிந்து சைவமே மெய்ச்சமயமென்று - நிச்சயந்தெரிந்து புத்தியாற்கண்டு - பத்திமேற்கொண்டு புத்ததேவனிடத்தில்வைத்த வுள்ளம்விண்டு பரமசிவனுக்குத் தொண்டுசெய்யநினைவுகொண்டு அன்புபெருகித்தாங் கொண்ட வேடத்தை மாற்றுதவராகி யுட்பத்தியோடுநடக்குநாட்களிலொருநாள் சிவலிங்கத்தைக்கண்டார். கண்டுதரிசனைகொண்டார்உண்மைக்கடவுளென்றறிந்தார். அன்பாகஒருகல்விட்டெறிந்தார்தாய் தந்தைமார்கள்சிறுபிள்ளைகள் இகழ்ச்சிசெய்யினுமவையினும்மகிழ்ச்சியாகக்கொள்வதுபோலச்சிவலிங்கமுஞ் சாக்கியரன் பாகவிட்டெறிந்தகற்பூசையை நற்பூசையாகக்கொண்டுமகிழ்ந்தது நாயனாரும் நித்தியம்பத்தியாகக்கல்விட்டெறிந்து அன்னம் புசித்துவருவார். சுவாமிக்குத் திருமேனியில்விட்டெறியுங் கல்லடியானது மலரார்ச்சனைபோலிருக்கும இவ்வாறுநடக்கையில், ஒருநாள்கல்விட்டெறிய மறந்துவந்து அன்னம்புசிக்கையில் சிவனைநினைந்து சிவலிங்கத்தின்முன் வந்து ஒருகல்லெடுத்தன்பாக வெறியப் பரமசிவனார்பார்ப்பதியாருடன் இடபவாகனத்திலேறிக் காட்சிதந்தருளக்கல்லெறிசாக்கியநாயனார்சிவலோகஞ்சேர்ந்தார்.

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிறப்புலிநாயனார்சரித்திரம்.

பொன்னிநன்னாட்டில் திருவாக்கூரில்வேதியர்குலத்தி லுதித்தவர் - வேதாகம விதிகளெல்லா முள்ளத்திற் பதித்தவர் - சிவனையுஞ் சிவனடியார்களையுந் துதித்தவர் சைவ சமயத்திற் கதித்தவர் அடியார் கேட்கும் பொருளெல்லா மளிக்கிறவர் - அன்பும்பத்தியுமே பெரிதெனக்களிக்கிறவர் - பஞ்சாட்சரக்கடலிற் குளிக்கிறவர் - பாவங்களைக்கண்டொளிக்கிறவர் - நித்தியவேள்விமுடிக்கிறவர் - பத்தியாம்சிவத்தைப்பிடிக்கிறவர்-இந்நாயனார் திருஞானசம்பந்தசுவாமிகள் திருவாக்கால் தேவாரத்திலே பாடப்பெற்றுச் சிவாநுக்கிரகத்தினாலே சிவனுடைய திருவடிச்செல்வத்திற்சேர்ந்தார்.

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிறுத்தொண்டநாயனார் சரித்திரம்.

சோழவளநாட்டில் திருச்செங்காட்டங்குடியில் மாமாத்திரர்குலத்தில் அவதரித்தவர் பரஞ்சோதியாரென்னுந் திருநாமமுடையவர். மருத்துவத்தொழில் படைக்கலத்தொழில் யானையேற்றங் குதிரையேற்றம் இவைமுதலிய தொழில்களிலேவல்லவர். யாவர்க்குநல்லவர் இவர் தேடியபொருளெல்லாஞ் சிவனுக்குஞ் சிவனடியார்க்குஞ் செலவாக்கி அரசன்கட்டளையால் வடதேசம்போகிச் சத்துருக்களைக்கண்டுசெயங்கொண்டு பலகோடிதிரவியங்களைத்தேடித் தம்மரசனை நாடிக்கொண்டோடிவந்து திரவியத்தைத் தந்துநிற்கையில் அரசன்மகிழ்ந்து பரஞ்சோதியாரைப்புகழ்ந்து உம்மைச் சிவபத்தரென்றறியாது போர்த்தொழிலுக் கனுப்பினேனென் குற்றத்தை மன்னித் தருளுமென்று சொல்லித் தேவரீர் உமதிட்டப்படி வேண்டியபொருளைக்கொண்டு திருத்தொண்டுசெய்திருங்களென்னப் பரஞ்சோதியார் எழுந்தருளி யவ்வாறு சம்மதித்துத் திருச்செங்காட்டங் குடியில்வந்து தம்முடையமனைவி திருவெண்காட்டு நங்கையுடன் திருத்தொண்டு செய்து சிறுத்தொண்டரென்னுந் திருநாமம்பெற்று வாழ்ந்துவருங்காலத்தில் சிவனருளால் சீராளனென்றொரு பிள்ளைபிறந்து அதுபள்ளியிற் கல்வியிற்சிறந்தது சிறுத்தொண்டருந் திருவெண்காட்டு நங்கையாரும் இருவருமொருமனப்பட்டுச் சிவனடியாரைச் சிவனெனப்பாவித் தன்னதானஞ் செய்து வருங்காலத்தில் பரமசிவனார் இவர்கள் பத்தியைச் சோதிக்கும்பொருட்டு வைரவத்திருவுருவெடுத்துத் திருக்கைலாயம்விட்டுப் புறப்பட்டுச் சிறுத்தொண்டநாயனார் திருமனைக்குள்வரத், திருவெண்காட்டுநங்கை தோழியாகிய சந்தனநங்கை யெதிர்கொண்டழைக்கத் திருவெண்காட்டுநங்கையார் வந்துபணிந்து சுவாமியுள்ளே யெழுந்தருளுங்களென்ன, அவர் சிறுத்தொண்டரெங்கே யென்றுவினவத் திருவெண்காட்டு நங்கையார் சுவாமி யின்றைக்குச் சிவனடியார்வாராமையினாலே, தொண்டர்தேடிச் சென்றார் இப்பொழுதிங்குவருவார் தாங்களிங்கிருங்க ளென்று, அன்பாகப்பணிந்துநின்றார்.

அதற்கவர் நாயகரில்லாதவீட்டிலே நாமிருக்கிறதில்லை சணபதீச்சரத்தில் திருவாத்திமரத்தின்கீழ் வீற்றிருக்கிறோமென் றெழுந்தருளினார். அத்தருணத்தில் சிறுத்தொண்டர் சிவனடியார்களைத் தேடிக்

காணுமையினல், வீட்டுள்வந்துசேர்ந்தார். மனைவியார்கண்டு சுவாமி, யிங்கொரு பெரியவர்வந்தார். இருக்கச்சொன்னேம் நாயகரில்லர்வீட்டி லிருக்கிறதில்லையென்று கணபதீச்சரத்தில் திருவாத்தியின் கீழெழுந்தருளியிருக்கிறேமென்றெழுந் தருளினர். தாங்கள்போயழைத்து வாருங்களென்றவுடன் சிறுதொண்டர் போய்ச் சுவாமி திருவமுது கொள்ள வெழுந்தருளுங்களென்றுபணிய நாம் ஆறுமாதத்துக்கொருமுறை யமுதுண்கிறது எமக் கிட்டப்படி படைக்க வுமாலாகுமோவென்னச் சிறுதொண்டர் அடியேனலே தங்களெண்ணப்படி யமுதளிக்கக்கூடுமென்றர். நாம் பசுவைக்கொன்று உண்ணவேண்டுமென்னத் தொண்டர் எனக்கநேகம் பசுக்களிருக்கின்றன அப்பசு இன்னதென்று சொல்லென்னச் சுவாமி நாமுண்பது நரபசு அது ஐந்துவயதுள்ளதா யவயவப் பழுதில்லாததாய்த் தாய்பிடிக்கத் தந்தையறுக்கச் சமைத்துப் படைத்தா லமுதுகொள்ளுகிறேமென்னத் தொண்டர் தேவர்மனப்படியே யமுதுபடைக்கிறேமென்று வீட்டேள்வந்து மனைவியாருடன் சுவாமி திருவுளம்பற்றியதைச் சொல்லிநிற்கையில், திருவெண்காட்டு நங்கை என்னுயிர்த்துணைக் கணவரே, நற்குடியிற் பிறந்ததாய் ஒருதாய்க் கொருபிள்ளையா யவயவங்கள் பழுதில்லாததாய் நாம் பொருள்கொடுத்து வாங்கப்பெற்றாலுந் தாய்பிடிக்கத் தந்தையறுத்துயிர்மடிக்கச் சம்மதிப்பார்களோ நம்முடைய பிள்ளையைப் பள்ளியிலிருந் தழைத்துவந் தப்படிச் செய்வோமென்னத் தொண்டர் முகமலர்ந்து அகமலர்ந்து பள்ளியிற்சென்று சீராளனை யழைத்துத் தோளின்மே லெடுத்துக் கொண்டுவந்து மனைவியார் கையிற்கொடுக்கத், தேவியார் வாங்கித் திருமஞ்சனமாட்டிச், செழுமலர்சூட்டி விளையாட்டுக் காட்டித் தாராட்டிச் சமையற்கட்டிற்கொண்டுபோய்ப் பரிகலங்கழுவி வைத்துத் தாய்பிடிக்கத் தந்தையரிந்து அவயவங்களை வெவ்வேறு பாகப்படுத்தி யாக்கினர்கள். தலையை மயிருள்ளதென்று நீக்கினர்கள் சந்தனநங்கை தலையையுமெடுத்துப் பாகஞ்செய்தாள். திருவெண்காட்டு நங்கையுஞ் சந்தன நங்கையும் இதம்பொருந்திய பதந்திருந்திய கறிகளமைத்து அன்னஞ்சமைத்துத் தொண்டரிடத்து வந்து சமையலாயிற்றுப் பெரியவரையழைத்துவாருங்களமுதளிப்போமென்னத் தொண்டர்சுவாமியையெழுந்தருளப் பண்ணிக்கொண்டுவந்து திருப்பாதங்களைவிளக்கித் திருத்தவிசிலிருத்தித் தீபதூபங்கொடுத்து அன்னம்படைக்கச் சுவாமி யுறுப்புக்களனைத்துஞ் சமைத்தீரோவென்ன ஆண்டவரே தலைக்கறியு ரோமமுள்ளதா லதை நீக்கி மற்றவையெல்லாமாக்கிவைத்தோமென்றார்கள்.

அதற்கவர் கெடுத்தீர்களே தலைக்கறியைவிண்ணு விடுத்தீர்களே நா னெப்படிககுறைவான கறிகளைப்பொசிப்பேனென்னத் தொண்டர்வி சனப்பட்டு மனைவியைப்பார்க்கையில் சந்தனநங்கை தலைக்கறிசமைத் தேனென்று கொண்டுவந்தளிக்க விருவருமகிழ்ந்து படைத்துச்சுவாமி தங்களிட்டபடி பொசியுமென்றார்கள். அதற்குப்பெரியவர் சிவனடி யார்களில்லாது தனித்துண்ணேனென்றார். சிறுத்தொண்டர் எங்குந்தே டிச் சிவனடியாரைக்காணாமல் முகவாட்டமாகவும் அகங்கோட்டமாக வுநின்று எங்களாண்டவரே யும்மையல்லாது சிவனடியார்களொருவரை யுங்கண்டிலே னமுதுகொள்ளுங்களென்னச் சுவாமி நீ யாவதுகூடவி ருந்துண்ணுமென்ன வவர் உடன்பட்டுண்ணவிருக்கத்திருவெண்காட் டுநங்கை யெல்லாம்படைக்கச், சுவாமிநாம்பிள்ளையில்லாவீட்டிற் போ சனம்பண்ணுகிறதில்லைப் பிள்ளையையழையுமென்னத் தொண்டர்இப் பொழுது வரமாட்டானென்றுசொல்ல, மற்றுஞ் சுவாமி பிள்ளையைத் தெரிவிற்போ யழைத்துவாருங்க ளென்னச் சிறுத்தொண்டருந் திரு வெண்காட்டுநங்கையும் தெருவிற்போய் அப்பாமகனே சீராளா ஐயரமு துகொள்ள வழைக்கின்றார் வருவாயாகவென்றழைத்தார்கள் அழை த்தவுடன் சீராளனென்னும் பிள்ளையானது தாராளமாகக் காலிற்சதங் கைக் கலகலெனச் சத்திக்கவந்தது. தாய்தந்தைமகிழ்ந்து தரிசனைசித்திக் த்தந்தது மாதாபிதாக்கள்மகனையெடுத்து, மார்போடணைத்து முத்த ட்டு உச்சிமோந்து. சுவாமிமுன்வந்து பார்க்கையி லவர் மாயமானார். ரிகலங்களிற்படைத்தகறியமுதுகளையுங் காணார்கள் தியங்கிமயங்கிச் வாமியைக்காணாது அழுதுதொழுதுநிற்கையில் பரமசிவனார் அந்தர மார்க்கத்திலே பார்வதிசமேதராய்வந்து காட்சிதந்து திருவருள்புரிந்து நால்வரையுங் கைலாயத்துக் கழைத்துக்கொண்டெழுந்தருளினார்.

திருச்சிற்றம்பலம்.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# கழறிற்றறிவார் நாயனார்சரித்திரம்.

மலைநாட்டில் கொடுங்கோளூரில் சேரமான் பெருமான்குலத்தில், செங்கோற் பொறையன் இராச்சியபரிபாலனம் பண்ணிக் கொண்டிரு

க்கையில், அவன்தேவியார் திருவயிற்றில், மாக்கோதையென்னும் பிள்
ளையவதரித்து இப்பிள்ளை யானவர் பக்குவகாலம் வந்தபின் திருவஞ்
சைக்களத்தில் சிவசந்நிதியில் உழைவாரப் பணிவிடைபண்ணிக்கொ
ண்டிருக்கையில் இவர்பிதா செங்கோற்பொறையன் அரசாட்சியை வி
ட்டுத் தவத்தைச் சார்ந்தார். மந்திரிகள் நாடாளுதற்கு வேறுபிள்ளையில்
லாமையால் திருவஞ்சைக் களத்தில் மாக்கோதையென்னும் பிள்ளை
யிடத்தில்வந்து உம்முடையபிதா நாட்டைவிட்டுக் காட்டிற் சென்ற
மையால் நீரேவந்து பட்டமாள வேண்டுமென்ன, மாக்கோதையார் ச
ஞ்சலமடைந்து சிவபணிவிடைக் கிடையூராக வந்தார்களென்று சிவ
சந்நிதியிற் போய் விண்ணப்பஞ்செய்யச் சுவாமிகொடுங்கோளூரிற்போ
யரசாளும்படி கழறிற்றறிவாரென்று திருநாமங்கொடுத்து அனுக்கிர
கஞ்செய்யச் சதுரங்க சேனைகளுஞ் சூழ்கத் தனிச்செங்கோல் செ
லுத்திவாழ்கக் கொடுங்கோளூரி லெழுந்தருளிப் பட்டத்துக்குரியவ
ரானார்.

இவ்வரசரொருநாள் யானையின்மேலேறிப் பட்டணப் பிரவே
சம் வருகையில், ஒருவண்ணான் மழையிலே யுவர்மண் சுமந்து வெ
ய்யலிலிருந்து புடவை வெளுத்தமையால் அங்கமெங்குந் திருநீறணிந்
ததுபோல வெளுத்து எதிரில்வரக்கண்டரசர் சிவனடியாரென்று யா
னையைவிட் டிழிந்து பணிந்தார். அவன் பயந்தொதுங்கி யடியேன் வ
ண்ணானல்லவோ வென்றான். அரசர் நாமுனக் கடிச்சேரனென்று
திருவுளம்பற்றிப் பயப்படாதே போமென்றார், இப்படிச் சிவதொண்
டு சிவபணிவிடைகளும் சிவனடியார்களுக் கன்னமும் யாகாதிகன்
மங்களுநடத்தி வைதிகச் சைவநெறிவழுவாது செய்யுங்காலத்தில், ம
துராபுரியில் சொக்கேசர் சந்நிதியிலிருக்கும் பத்திரனென்றொரு வித்
துவான் திரவியம் வேண்டுமென்று சுவாமியைப் பாடினான் சுவாமி
சேரமானுக்குத் திருமுகங்கொடுத்துச் செம்பொன்முதலியன பெற்று
க்கொள்ளெனக் கனவிற் கட்டளையிடப் பத்திரனென்னும் பாணன்
சங்கப்புலவரி லொருவராகிய சொக்கேசர் தந்த திருமுகத்தைச் சேர
மான் பெருமான் திருச்சந்நிதி முன்கொடுக்க வரசன் சுவாமி திருமுக
த்தைக் காமேற்கண்டு சிரமேற்கொண்டு மதித்துத் துதித்து மகிழ்ந்து
புகழ்ந்து பூசித்து வாசித்து நேசித்து யோசித்துக் களஞ்சியந்திறந்து
பத்திரனென்னும் வித்துவானுக்கு வேண்டிய திரவியங்களைக் கொ
டுக்க அவர் யானை சேனைகளா லெடுத்துச் சென்றார், அரசன் நாள்

தோறுஞ் செய்யுஞ் சிவபூசையில் நடேசர் பாதச்சிலம்பொலி
கேட்கிறதுண்டு ஒருநாளவ்வோசை கேளாதிருக்கையில் அடியேனெ
ன்னகுற்றஞ் செய்தேனென்றுடைவாளையெடுத்துத் தன்மார்பிற்குற்
றியழுத்துகையில் திருப்பாதச்சிலம்போசை கேட்கப்பட்டது. அப்
பொழுது அரசன் சுவாமியைவணங்கி பெருமான்செய்தகுற்றமென்
னவென்று கேட்கப் பூசைசெய்யுஞ்சிவனுக்குத்தலைமேலோர்சத்தஞ்சி
தம்பரத்தில் சுந்தரர்வந்து பதிகம்பாடினார், கேட்டிருந்தோமதனாலே
சிலம்பொலிதாமதப்பட்டதென்றுபிறந்தது. சேரமான்பெருமான் சு
வாமிதிருவாக்கைக்கேட்டுச் சேனாசமுத்திரந்தாழ்ந்துவர மந்திரியார்
கள் சூழ்ந்துவரச் சிதம்பரத்தையுஞ் சுந்தரமூர்த்திசுவாமிகளையுந் தரி
சிக்கும்பொருட்டுப்பலதலங்களையுஞ் சேவித்துச்சிவனடியார்களைச்சி
வனாகப்பாவித்துவணங்கிச் சிதம்பரத்தி லெழுந்தருளித்திருநடனச்
சேவையையுஞ் சேவித்துத் திருவந்தாதியும்பாடித்திருவருளை யெய்
தித்திருவாரூருக்கெழுந்தருளினார்,

சுந்தரமூர்த்திசுவாமிகள் திருநாகைக்கு எழுந்தருளித் திருவா
ரூர்க்குவருகையில், சேரமான்பெருமான் வருகிறசெய்தியைக்கேட்
டு எதிர்கொண்டுவரச் சேரமான்பெருமான் முன்புவணங்கச் சுந்தர
மூர்த்திகள் பின்புவணங்க இருவரும் திருவாரூர்ச்சிவாலயத்திற்போ
ய்ச்சுந்தரர்பதிகமும் இராஜாமும்மணிக்கோவையும் பாடிப்பணிந்து
பரவையார்திருமாளிகைக்குவந்தார்கள் பரவையார் அன்னம்படைக்
க, இருவரும்வந்தசனங்களும் புசித்தார்கள் பின்புதிருமறைக்காட்டி
ற்போய்ச்சுந்தரர்பதிகமும்சேரமான் திருவந்தாதியும்பாடித்தொழுது
பாண்டிநாட்டி லெழுந்தருளினார்கள், பாண்டியனுஞ்சோழனுமிவர்க
ள் வரும்செய்தியைக்கேட்டு எதிர்கொண்டு சொக்கலிங்கர்சந்நிதியி
லழைத்துக்கொண்டுபோனார்கள் அங்கும்பதிகம்பாடிச்சிலநாளிருந்துசு
ந்தரருஞ்சேரமானும்திருக்குற்றாலம், திருநெல்வேலி திருச்சுழிமுத
லியதலங்களைப்பாடித் தரிசித்துத் திருவாரூரில்வந்து பரவைநாச்சி
யார்வீட்டில்சிலகாலமிருந்து திருவையாறுதரிசிக்க வருகையில், கா
வேரிவழிவிடப்பாடிமலையாளத்திற்கெழுந்தருளிச் சிவதலங்களைத்தரி
சித்துக் கொடுங்கோளூரில்வந்து சிலநாளிருந்தார்கள், சுந்தரர்சேர
மான்பெருமானிடத்தில் அளவில்லாததிரவியங்கள்வாங்கி, விடைபெ
ற்றுக்கொண்டுவருகையில், திருமுருகன்பூண்டிவழியில் சிவன்செயலா
ல்பூதகணங்கள் வேடர்வடிவமெடுத்துத் திரவியங்களையெல்லாம்பறி
த்துக்கொள்ளச் சுந்தரர்முருகன்பூண்டிச் சிவசந்நிதியில் வந்துதிருப்

பதிகப்பாவைப்பொருளைப்பதித்துக்கொண்டீர் பதியுமக்கேயென்று பணியச்சுவாமியருளால் திரவியங்களைப்பூதங்கள்கொண்டுவந்து கோபுரவாயிலிற்குவிக்கச்சுந்தரர் அவைகளையெடுப்பித்துக்கொண்டு திருவாரூரிற்பரவையார்க்குக்கொடுத்துச் சுகமடைந்திருந்தார். சேரமான்பெருமாளும் மநுநீதிவழுவாமல் செங்கோல்செலுத்திச் சிவபணிவிடைசெய்திருந்தார்.

## கணநாதநாயனார்சரித்திரம்.

சோழவளநாட்டில் சீகாழித்தலத்தில்பிராமணர்குலத்தில்உற்பத்தியானவர் நற்புத்தியும்விற்பத்தியுமுடையவர் கணநாதநாயனார் இவர் திருக்கோயில் திருக்குளம் நந்தவனம் இவைகளைத்திருவலகுகொண்டு சுத்தமாக்குகிறவர் கருமங்களெல்லா நீக்குகிறவர் தருமங்களையெல்லாநோக்குகிறவர் திருமாலைகட்டிச்சந்திப்பந்தங்களெல்லாந் தூக்குகிறவர் சிவனடியார்களைச்சிவனாகப்பார்க்கிறவர், அவர்கள்வறுமைகளைத்தீர்க்கிறவர் திருஞானசம்பந்தசுவாமிகளால் நல்வழிக்குரியமெய்ஞ்ஞானமடைந்து உத்தியந்தஞ்சிவபத்தியிலே புத்தியும்யுத்தியுஞ்செலுத்திச் சத்தியமாக நித்தியவத்துவைச்சுத்தியாகவடைந்து சித்திபெற்றுக்கைலாயஞ்சேர்ந்தார்.

## களந்தைக்கோநாயனார்சரித்திரம.

களந்தைக்கோனென்னுங் கூற்றுவநாயனார் சிவனைத்துதித்துச்சிவனடியார்களைமதித்துத் திருநீறுஉருத்திராக்கந்தரித்துப் பஞ்சாக்கரமுச்சரித்துச் சத்துருக்களைச்சங்கரித்துமித்துருக்களையநுசரித்து நித்தியஞ்சிவமெனக்கண்டு பத்திவைராக்கியங்கொண்டு வாழுநாளையில் தில்லைவாழந்தணர்களிடத்திற்போய்த்தமக்குத்திருமுடி சூட்டவேண்டுமென்றுசொல்ல, அதற்கவர்கள்நாங்கள் சோழமகாராசன் வமிசத்திற்பிறந்தவர்களுக்கு முடிசூட்டுவதன்றி மற்றவர்களுக்கு முடிசூட்டோமென்னச் சொல்லக்கேட்டுக்கூற்றுவநாயனார் தமமுடையமலைநாட்டிற்சேர்ந்து நடேசர்திருவடியைநினைந்து விசனமடைந்துநித்திரா செய்கையில்சுவாமிசொப்பனத்திலேவந்து குருமூர்த்தமாகத்திருவடிதீட்சைதந்து திருவருள்புரிய நாயனார்சுவாமிதிருவடியேதிருமுடியாகவைத்தும் மநுநீதி முறைமைப்படி செங்கோலாண்டுசிலநாளையின்பின்சிவபதஞ்சேர்ந்தார்.

## பொய்யடிமையில்லாதபுலவநாயனார்சரித்திரம். அரு

எழுத்து - சொல் - பொருள் யாப்பு - அணி என்னுமைந்திலக்கணங்களையும்பகுத்து வகுத்துத்தெரிந்து ஆசு - மதுரஞ்சித்திரம்விஸ்தாரம் என்னுநாற்கவித் திறங்களையுமறிந்து சொற்சுவைபொருட்சுவையோடு அமிழ்தினுமினிய தமிழ்ப்பாமாலைபாடும்பொய்யடிமையில்லாத புலவநாயனார் இவர்வேதாகமசாத்திர புராணங்களைக்கற்கவல்லவர் சிவனடியார்களைச் சிவமாகக்கொண்டவர் பத்திவைராக்கியம்பெற்றவர் அறுபத்துநான்குகலைகளுமுணர்ந்தவர் சிவபுண்ணியமேசெய்து சிவனடியாரைவணங்கிச்சிவபத்தியிலிருந்து சிவலோகஞ்சேர்ந்தார்.

## புகழ்ச்சோழநாயனார்சரித்திரம்.

பூவிரியுஞ்சோலையுங் காவிரியுஞ்சூழ்ந்த சோழ தேசத்தில் கருவூரில் அநபாயச்சோழராஜன் குலத்திற்பிறந்தவர் புகழ்ச்சோழர் இவர் நீதிநெறிதவறாமலும் அதிகவிளைவுங்காலமாமழையும் சைவசமயந்தழைக்கவும் சகலவுயிர்களையும் பாதுகாக்கவுஞ்செங்கோல்செலுத்தித் திருநீறணிந்து உருத்திராக்கம்பூண்டு [illegible] சிவாலயம் யாலயங்களுக்குதவி செய்து சிவபத்தர்களைக் காத்துத் தருமங்களைத் தவறாது நடத்திவாழுங்காலத்தில் குடி . வர்த்தனர்கள் கப்பங்கட்டிமுடிதாழ்த்து அடிசூழ்ந்திருக்கையில்.

மந்திரிகள் அரசனைநோக்கி மலையாளத்தரசன் இறைகொண்டு வரவில்லையென்னப் புகழ்ச்சோழர்கோபித்து அவ்வரசன்மேற்படையெடுக்கச் சொன்னவுடனே போர்மன்னர்போர்க்குப்போய் மலையாளத்தை யழித்துச் சேனைகளைக்கிழித்து யானைகளையொழித்துப் போரிற்செழித்துப் புறங்கண்டவரைப்பழித்துப்பலர்தலைகளைவெட்டிக்கட்டிக்கொண்டு கருவூரில்வந்தார்கள் அவைகளைப்புகழ்ச்சோழர்முன்பு தந்தார்கள் புகழ்ச்சோழர் தலைகளைப்பார்க்கையில்; அவற்றிலொருதலை சடைமுடியோடுதிருநீறு தரிக்கப்பட்டிருந்தது, அரசன்கலங்கி நலங்கி நடுநடுங்கி யொடுங்கி ஐயோ என்னசெய்வேன் சிவனடியானைக்கொலை செய்வித்தேனே இனிநான்கடைத்தேறும் வழியில்லையென்று உலகை பாருதற்குத் தன்மகனுக்குப் பட்டங்கட்டும்படி. மந்திரிகளுக்குஞ் சொல்லி, அக்கினிவளர்த்திச்சடைமுடித் தலையைப்பொற்றட்டில் வைத்துநீராடிநீறுதரித்துப் பஞ்சாக்கரத்தை யுச்சரித்துத்தீவலம்வந்து சிவனைப்பணிந்தெரிகிறதீயில்விழுந்தார்தேவர்கள்பூமாரிபெய்தார்கள். முனிவர்களாசிர்வதஞ்செய்தார்கள் பரமேச்சுரன் கைலைப்பதி புகழ்ச்சோழர்போய்ச்சேர்ந்தார்.

திருமுனைப்பாடிநாட்டுக்கு அதிபதியாகிய நரசிங்கமுனையர்குற்றங்கடிந்து, குணங்கள் படிந்து பகைமேற்சென்று பாரகுடன்வென்று நினைவிலுங் கனவிலும் பரமசிவனை மறவாமலுந்துறவாமலும் சிந்தனைவந்தனைசெய்து திருவாதிரைநட்சத்திரந்தோறும் வந்தசிவனடியார்களுக்கு நூறுபொன்னும் அன்னமுங்கொடுத்துச் செங்கோல்செலுத்தி வாழுநாளில், ஒருவர்சிவபத்தராகக் காமக்குறிதோன்றத் தூர்த்தவடிவாய்த் திருவாதிரையிற்சிவனடியார்களுடன்வர நரசிங்கமுனையர்கண்டெதிர்கொண்டுபசாரஞ்செய்து அவர்க்கு இருநூறுபொன்கொடுத்து அன்புடனடுத்துவழிவிடுத்துச்சிவனை வெண்ணணி வேடமுடையவுதவிபண்ணி அவனையனுப்பினதால், சிவலோகஞ்சேர்ந்தார்.

## அதிபத்தநாயனார்சரித்திரம்.

நாகைப்பட்டினத்தில் நுளைய குலத்திற்பிறந்தவர் அதிபத்தநாயனார் பரமசிவனிடத்து அன்புடைத்திருமுடையவர். அலைவீசுங்கடலில்வலைவீசிமீன்பிடித்து வந்துச்சிவனடியார்களுக்குதவிபண்ணி அவர்களைச்சிவனுக்கென்னணி வாழ்கிறவர் இவர் அநேகச்செல்வந்துள்ளவராகமனத்திருத்தியாக்கியாத்தியாகவிருக்கையில் நாடோறும் வீசியவலைகளுக்கொவ்வொருமீன்சிவனுக்கென்றுசமுத்திரத்தில் விட்டுவிடுவார்சுவாமிசோதனையால் வலைக்கொவ்வொருமீனைபடும் அவைகளையுமப்படியே சிவனடிக்கென்றேவிடுவார். அதனாலவர்குலத்துள்ளோர் உணவில்லாமலிருந்துவார்கள் ஒருநாள்வீசியவலையில் நவமணிகளப்பிரகாசம்போலவுலகமெல்லாம் விளங்கத்தக்கப்படத்தக்க மீனொன்றுபட்டது அதையுஞ்சிவன்சேவடிக்கென்று அதிபத்தர் கடலிலெடுத்துவிட்டு விட்டார். அப்பொழுதுபக்தர்பத்திமைக்கண்டு சுவாமிபார்ப்பதியாருடனிடபவாகனத் தோன்றிவந்து காட்சிதந்துதிருவருள்செய்தார். அதிபத்தர்கைலாயஞ்சேர்ந்தார்

## கலிக்கம்பநாயனார்சரித்திரம்.

திருப்பெண்ணாடகமென்னும் பட்டினத்தில் வணிகர்குலத்தில் அவதரித்தவர் - கலிக்கம்பநாயனார் இவர் தூங்கானைமாடத்துக்கடவுளைக்கருத்தி லிருத்தித்தொழுகிறவர் திருத்தொண்டுசெய்யவெழுகிறவர்-சிவபத்தருக்குநாள்தோறு மன்னமும் பலவகைக்கறிகளும் பால் தயிர் நெய்-தேன்-சர்க்கரைகற்கண்டுமுக்கனிவடைதோசை யப்பமதிரசமுதலிய பலவைப்பண்டங்களும்- ஆடையாபரணஞ் செம்பொன்பூ

நன்மலர்களைச்சொரிந்தவர், சிவத்தையிகழ்ந்தவர்நாவைக்கத்தியாலரி றவர் இவர்சிவனை வைதவர்களையும் சிவனடியார்களுக்குத் தீங்கு செய்தவர்களையும் ஒறுத்தும்வாளாலேனாலேயடக்கும் திருத்தொண்டுசெய்து திருச்சிவாலயங்களைத் தரிசித்துவருகையில்அடையுங்காலத்தில் சிவபதமடைந்தார்.

## ஐயடிகள்காடவர்கோநாயனார்சரித்திரம்.

பல்லவர்குலமுறையிற்பிறந்தவராகியஐயடிகள்நாயனார் சைவசமயவிதியில்வழுவாமலும் புறச்சமயங்களைத்தழுவாமலும் செங்கோல்நெறிவழுவாமலும் அரசாளுகையில்சந்நிதிகளையும் சந்திகளைக்கண்டு செலவுசெய்து தலங்களிற்கொவ்வொரு வெண்பாபாடிச்சிவனடிகளைத்திருமுடியிற்சூடித்திருக்கூட்டங்களைக்கொண்டாடிக்கொண்டு அன்பமளித்துப்பலதலங்களையும்பணிந்து அடையுங்காலத்தில் சிவலோகமடைந்தார்.

## கணம்புல்லநாயனார்சரித்திரம்.

சோழநாட்டில் வடவெள்ளாற்றுத் தென்கரையில் வேளூரிலிருக்கும் பாராளர்போற்றுமகாராளர்குலத்திற்பிறந்தவர் கணம்புல்லநாயனார் திரவியமும் சிவனிடத்தில்அன்பும் நட்பமானமுயற்சியும் உடையவர்இவர் சிவாலயங்களுக்கெல்லாநெய்விளக்குவைத்துவருபவர் சிவபத்தருக்குமுதலுதவுபவர், சிவன்செயலால் செல்வஞ்சுருங்கச் சரீரமுழலவருத்தமடைந்து மிருக்கையில்,புல்லறுத்துவிற்றுச் சந்நிதிகளுக்கு நெய்விளக்குவைக்கிறவர் அப்படியிருக்கையில், பலதலங்களுக்கு நெய்விளக்கேற்றிச்சிதம்பரத்திலும்வந்து அப்படிச்செய்து திருப்புலீச்சரத்திற்புல்கொய்து விற்று அவ்வாறுவிளக்கேற்றிவருகையில் ஒருநாள் புல்லினைஒருவரும் வாங்காமையாலே புற்சுமைகாய்ந்து தீர்ந்துபோனதாலுஞ்சாயங்காலமானதாலும் சுமையைச்சந்நிதிமுன்கொண்டுபோய்ப்போட்டுத்தீமூட்டி விளக்குக்குப்பதிலாக எரித்தார் அதன்பின் அத்தீயில்தம்முடைய தலையையும் உரோமம்பற்றும்படி யெரித்தார் அதுகண்டுபரமேசுவரர் கணம்புல்லநாயனாருக்குக்கைலாயபதவி தந்தருள்செய்தார்.

## காரிநாயனார்சரித்திரம்.

சோழமண்டலத்தில் திருக்கடவூரென்னுந் தலத்திற்பிராமணர் குலத்திற்கல்விப்பலத்தில்தி அகப்பட்டவர் காரிநாயனார் இவர் தமிழ்

க்கடல்கடந்தவர் சைவாகமவிதிப்படி நடந்தவர்சேரசோழபாண்டியர்களை பெயராற்கவிகள்பாடிக்கொண்டாடித் திரவியங்களைத்தேடிச் சிவனடியார்களைநாடி அவர்களடிகளைச் சிரசிற்சூடி அன்னமுதலானவை கொடுத்தும சிவசந்நிதிகளுக்குவேண்டுவனவுகளிசெய்தும் கீர்த்தியாகவும் இருதயபூர்த்தியாகவும சைவத்திற்பத்தினைவைத்துச் சரீரத்துடன்கைலாயஞ்சார்ந்தார்.

நெடுமாறநாயனார்சரித்திரம்.

பாண்டியவளநாட்டில் கடம்பவனக்காட்டில் சோமர்குலத்தில் மதுரைத்தலத்தில் அவதரித்தவர் மாறநாயனார் மங்கையர்க்கரசியாரைமணமுடித்தவர் சமணர்களை யடித்தவர் தேவேந்திரனைச்செயங்கொண்டவர் மாறவரசர்களைப்புறங்கண்டவர் திருநெல்வேலியிற்சென்றுடை அழகும்பகைவரைவென்றவர் சிவனடியார்களைச்சிவனாகமதித்துச் சிவபதமேதரித்துப்பஞ்சாக்கரத்தை மனதிற்பதித்துப் பறிதலையர்மதத்தை மிதித்துச்சைவமோங்குப்படியரசுசெய்து சேருங்காலத்திற் சிவலோகஞ்சேர்ந்தார்.

வாயிலார்நாயனார்சரித்திரம்.

தொண்டைவளநாட்டில் திருமயிலாப்பூரில் சாத்திரமறிந்தவர்சூத்திரவமிசத்திற்பிறந்தவர் வாயிலார் இவர்சைவத் திருக்கோலம்பூண்டு பஞ்சாக்கரத்தைநினைந்து இதயகமலமென்னுங்கோயிலில் அறிவென்னுந் திருவிளக்கேற்றிப்பரமசிவனுக்குஆநந்தமாகிய திருமஞ்சனமாட்டி அன்பாகிய வமுதைப் படைத்துச்சிலகாலமிருந்து சிவபதஞ்சேர்ந்தார்

முனையடுவார்நாயனார்சரித்திரம்.

பொன்னிவளநாட்டில் திருநீடூர்வேளாளர்மரபிற்பிறந்தவர்வெறுமையிற்சிறந்தவர் முனையடுவார்நாயனார் இவர்சிவத்திருக்கோலந்தரித்துச் சத்துருக்களைச் சங்கரித்து அதனால்வரும்பொருள்களைச் சிவனுக்குஞ் சிவனடியார்களுக்குஞ்செலவுசெய்து அவத்திலேபொழுதுபோக்காமல் சிவத்திலேமனதைச்செலுத்துகையால் காலமுடிந்தபின் கைலைப்பதஞ்சேர்ந்தார்.

கழற்சிங்கநாயனார்சரித்திரம்.

பல்லவர்குலத்து இராசனான காடவர்கோனென்னுங் கழற்சிங்கநாயனார் பூதிசாதனம்பூண்டு பஞ்சாக்கரத்தைநினைந்து சிவாலயந்த

ளையும் சிவபத்தர்களையுமவழிபட்டுவருகையில் திருவாரூரில் சிவசந்நிதியில் சுவாமியைச்சேவித்து நிற்கையில் திருப்பூம்பலகைச்சமீபத்தில் ஒருபுதுப்பூவிருந்தது அந்தப்பூவை அரசன்தேவியாரெடுத்து முகந்தார் அச்சமயத்திற்செருத்துணைநாயனாரெழுந்தருளினார். அவர்கண்டு சிவசந்நிதியில் திருப்பூம்பலகைச்சமீபத்தில் விழுந்தபூவைநீயெடுத்துமோந்தபடியாலேமோந்தமூக்கையறுப்பேனென்று தேவியார் மூக்கையறுத்துச்சிவனைத்தொழுதிருக்கும் அரசனறிந்து இவ்வாறுசெய்ததுயாரென்றுகேட்கச் செருத்துணையாரென்றறிந்து உடைவாளையுருவி பூவையெடுத்த கையையுந்தறித்தார். அப்பொழுது சுவாமிவெளிப்பட்டு இருவருக்குமுன்னிலையாகி ஆசீர்வாதஞ்செய்ய அவர் சுவாமியுடனேயிருந்து சிவலோகஞ்சேர்ந்தார்.

### இடங்கழிநாயனார்சரித்திரம்.

கோனாட்டில் கொடும்பாளூரில் சூரியகுலத்திற்பிறந்தவர் இடங்கழிநாயனார் இவர்சிவசந்நிதிகளுக்குஞ் சிவனடியார்களுக்குஞ் செய்யும் பணிவிடைகளைச் செலுத்திவருங்காலத்தில் ஒருபெரியவர்சிவத்தொண்டர்களுக்கன்னமிடுதற் கில்லாமையால் அவ்வூரில்நெற்போரில் இராத்திரியில் நெற்களவுசெய்கையில்காவலாளர்கள்பிடித்துக்கொண்டு இடங்கழியாரிடத்திற்கொண்டுவந்தார்கள் அரசனிதென்னசெய்தீரென்னப்பெரியவர்சிவனடியார்களுக்கு அன்னதானஞ்செய்ய வொன்றுமில்லாமையாலிப்படிச்செய்தேனென்றார். அப்படியானால்உமக்குவேண்டியவைகளைத் தருவோமென்றுகளஞ்சியங்களைத்திறந்து கொடுத்தவரையாதரித்துச்சிலகாலமிருந்துசிவலோகஞ்சேர்ந்தார்

### செருத்துணைநாயனார்சரித்திரம்.

பொன்னிநன்னாட்டில் மருகலூரில் வேளாளர்மரபிற்பிறந்தவர் செருத்துணைநாயனார் சைவசமயத்தைச்சார்ந்துசிவபணிவிடையேபெரிதெனக்கொண்டிருந்தவர் சிவனடியார்களுக்குஞ்சிவாலயங்களுக்கும் இடையூறுசெய்கிறவர்களை யாதாயினுஞ்செய்கிறவர் சிவனையேயெண்ணுகிறவர் திருவாரூரில்கழற்சிங்கனென்னுமரசனும் தேவியாரும்சிவாலயத்தைவலம்வந்து தொழுகையில் திருப்பூம்பலகையினருகேயொருபூவிழுந்தது அதைத்தேவியாரெடுத்தாக்கிராணித்தார் அதுகண்டு அரசன் தேவியாரைமயிரைப்பிடித்திழுத்து விழுத்திப் பூவைமோந்தமூக்கையறுத்தார் பின்கழற்சிங்கர் தேவியார்கையையுந்தறித்தார் இவ்வாறு அநேகந்தொண்டு விக்கினங்களைத் தடுத்துச்சிலகாலமிருந்து சிவலோகஞ்சேர்ந்தார்.



இடங்கழிநாயனா



செருத்துணைநாயனார்

## புகழ்த்துணைநாயனார்சரித்திரம்.

செருவிலிபுத்தூரில் பிராமணகுலத்திற் பிறந்தவர், புகழ்த்து
ணைநாயனார் இவர் சிவசாதனம்பெற்றுச் சிவாலயங்களுக்குச்சிவாகம
விதிப்படிச் சிவபூசைசெய்துவருநாளையில் பஞ்சகாலமுண்டாயிற்று
ப்புகழ்த்துணையார் சிவனுக்குநைவேதனமில்லாமையால் நீரும்பூமா
த்திரங்கொண்டு பூசைசெய்வார் ஒருநாள்பசியாலிளைத்துங் களைத்து
நீர்க்குடமும் பூவுங்கொண்டுவந்து சிவலிங்கத்தின்மேற்போட்டுவிழு
ந்து மூர்ச்சையாய்நித்திரைசெய்கையில் சுவாமிகனவில்வந்துபத்தரே
பசியாலிளைத்தீர், தினந்தோறும் பலிபீடத்தில் திமொருகாசுவைக்கி
ன்றோமதையெடுத்துப்பூசை நடத்துமென்ன உடனே விழித்துப்பார்க்
கையிலொருகாசிருந்தது அதைப்புகழ்த்துணையாரெடுத்து நித்தியபூ
சனைதவறாதுநடத்திச் சிவனடியார்களுக் கன்னங்கொடுத்துச் சிலகா
லமிருந்து சிவலோகஞ்சேர்ந்தார்.

## கோட்புலிநாயனார்சரித்திரம்.

சோழவளநாட்டில் நாட்டியத்தான்குடியில் வேளாளர்மரபில் அ
வதரித்தவர்கோட்புலிநாயனார் இவர் சோழமகாராஜன்வாயிலில் முதன்
மந்திரியாராகிய தந்திரியார் சிவனடியார்களுக்கு அன்னமும் சிவாலய
ங்களுக்குச் சொன்னமுங்கொடுத்துச் சிவபூசையடுத்துவாழ்கிறவர் தி
ருத்தொண்டர்களுக்கும் தேவாலயங்களுக்கும் வருடாந்தோறு நெற்
போரகட்டுகிறவர் பகையரசர்களைப்போரில் வெட்டுகிறவர் சிவசிந்
தனையே கவலைந்தனையாகக்கொள்ளுகிறவர். அரசனுத்தரவால் வடம
ன்னர்பகைவெல்லும்படிபோம்பொழுதில் சிவனுக்குக்கட்டுவித்த நெ
ற்களஞ்சியத்தையெடுக்கவேண்டாமென் றினசனங்களுக்குச் சொல்
லிப்போனார், அப்பொழுது பஞ்சகாலமுண்டானதால் உறவினர்கள்
நெல்லையெடுத்துண்டார்கள் கோட்புலியார்வெற்றிபெற்றுச் சிலதிரவி
யங்கொண்டுவந்திச்செயதியைக் கேட்டுவிசனங்கொண்டு இனசனங்க
ளைவெகுமதிசெய்பவர்போல் வரவழைத்து அவர்களை வீட்டுள்விட்டுக்
கதவைச்சாத்தித்தாழிட்டு உடைவாளை உருவிமாதாபிதாமுதலியவி
னசனங்களையெல்லாந் தமதுகையினாலே கண்டதுண்டங்களாகவெட்
டினார் மனைவியார்கண்டு குடும்பத்துக்கொருபிள்ளையாக முலையுண்கி
ற குழந்தையைக் கடைக்காவலாளன்கையிற்கொடுக்க அவன் இது அன்னங்கொ

ண்டதம்பலமேவியென்றுகோட்புலியாருக் கறிக்கையிடக்கோட்புலியார் அன்னமுண்டதாயின்முலைப்பாலுண்டதல்லவோவென்று சிசுவையும் வெட்டினார். சுவாமி இவர்பத்தியையும் அன்பினையுங்கண்டு மகிழ்வு கொண்டு நாயனாருக்குக் காட்சிதந்து கைலாயத்தில் வைத்தருளினார். வெட்டப்பட்டிறந்தவர்கள் வீரசொர்க்கமடைந்தார்கள்.

பத்தராய்ப்பணிவார் நாயனார்சரித்திரம்.

திருவாரூர்த்தியாகராயரை இரவும்பகலுமிடைவிடாது உள்ளத்தி லெண்ணிக் கண்பனி யானந்தக்கண்ணீர்பெருக, அன்பினென்பு முருக அரகராவென்கின்றசத்தம் அஞ்சலிசெய்துநித்தம் உண்டாகத் துதிக்கிறவர் சிவனடியாரைக்கண்டால்துதித்துமகிழ்கிறவர் சிவபுரா ணம்வாசிக்கிறவர் சிவனையேநேசிக்கிறவர் நடக்கையிலும் படுத்துக்கி டக்கையிலும் உண்ணுகையிலும் பலதொழில்பண்ணுகையிலும் சிவ மேசிவமே யென்றுபோற்றுகிறவர் திருத்தொண்டரைக்கண்டேத்து கிறவர்.

பரமனையேபாடுவார்நாயனார்சரித்திரம்.

முப்புரமெரிக்கத் துணிந்தவரை பராபரனாமனிதவரை அறி வின்மயமாகியபொருளை யாவுமாகியவருளை ஐம்புலனுமினியதமிழா லும் வடகலையாலுந் தேசிகத்தாலும் பாடிப்பரவுபவர் பரமனரு ள்வரமுற்றவர் பரமனையேபாடுவார் நாயனார்சிதம்பரத்தில்வாழுஞ்சபா நாயகனைச் சகலவுயிருக்குந்தாயகனைச் செல்லுமிடமெல்லாம்பாடுவார் அல்லு ம்பகலுந் தேடுவார் ஆனந்தக்கூத்தாடுவார் அரனடியே நாடுவார்.

சித்தத்தைச்சிவன்பால்வைத்த நாயனார்சரித்திரம்.

காரணமாகியகர்த்தனைக் கடவுளுங்காணாத சித்தனை அரணமூல மாகியவத்தனை அன்பருள்ளத்திருக்குஞ்சித்தனைத் தாரணைவழியாகவாடி ச்சஞ்சலமறத்தேடிச் சித்தமாகியமலரைச் சிவத்துக்கென்றேசூடிச் சி வாநுபோகத்தி லுறவாடிச் சிந்தித்துவந்தித்துநின்றவர்சித்தத்தைச்சி வன்பால்வைத்தவர்.

திருவாரூர்ப்பிறந்தார் நாயனார்சரித்திரம்.

திருவாரூர்ச்சனித்தவர் சிவபணிவிடைக்கினித்தவர் சிவமேபொ ருளெனநின்றவர் இங்கனைத்தும்வென்றவர் திருவாரூரை வலஞ்சூழ்ந்து



பத்தராய்ப்பணிவார்

பரமனையே பாடுவார்



சித்தத்தைச் சிவன்பா
லேவைத்தார். ஆரூர்ப்
பிறந்தார்.



முப்போதுந் திருமேனி தீண்டுவார்
முழுநீறு பூசிய முனிவர்

சிவநேசநாயனார்சரித்திரம்,

காம்பீலியென்னும்பட்டினத்தில் சாலியர்குலத்திற்பிறந்தவர் சிவநேசநாயனார் இவர்சிவனடியார்களுக்கு உடைகோவணமுதலிய நெய்துஅவர்களுக்குத் தொண்டுசெய்து கொடுத்தும்அடுத்தும்வாழ்பவர்அவர்களைக்கண்டுதொழுபவர் அடையுங்காலத்திற் சிவலோகஞ் சேர்ந்தார்.

செங்கட்சோழநாயனார்சரித்திரம்,

சோழவளநாட்டில் சோலைநெருங்கியநாட்டில் சந்திரபுட்கரணிக்கருகில் வெண்ணாவல்மரத்தடியில், ஒருசிவலிங்கமிருக்கிறது இவ்விலிங்கத்தை வெள்ளானை பூசித்ததால் திருவானைக்காவென்றுபெயராயிற்று, சிவலிங்கத்தின்மேல் சருகுமுதலியனவிழாதிருக்கும்படி ஒருசிலந்திப்பூச்சிபட்டு நூற்பந்தலிட்டவதையானையசுத்தமென்று கண்டழிக்கச்சிலந்தியானைத் துதிக்கையினுள்நுழைந்துகுடைய யானைதுதிக்கையைத்தரையிலடிக்கச்சிலந்தியும்யானையுமிறந்தன சிலந்திசுபவேதச்சோழனுமவர்மனைவியும் பிள்ளையில்லாது சிதம்பரத்திற்றவஞ்செய்கையில் சிவனருளால்கமலவதியார்வயிற்றில் பிள்ளையாகவந்து பிரவேசித்தது பிள்ளைபிறந்தவுடனேகண்சிவந்தாயிருந்தால் அவனுக்குச் செங்கட்சோழனென்றுபெயர்கொடுத்தார்கள் இவர் சிவாலயங்களைக்கட்டுவித்துத் திருத்தொண்டுசெய்து சிலகாலமிருந்து சிவலோகஞ்சேர்ந்தார்.

திருநீலகண்டயாழ்ப்பாணநாயனார்சரித்திரம்,

எருக்கத்தம்புலியூரிற்பிறந்தவர் திருநீலகண்டயாழ்ப்பாணநாயனார் இவர்தேவியாருடன்தலங்களெங்குஞ்சேவித்துமதுரையில்வந்துயாழ்வாசிக்கையில் சுவாமிபொற்பலகை கொடுக்கும்படி அசரீரிவாககாலநுக்கிரகஞ்செய்யத் தொண்டர்கள்சுவாமிசொற்படி பொற்பலகையிட்டார்கள் பாணரதிலிருந்து பாடியநுக்கிரகம்பெற்றுத் திருவாரூரிலும் சீகாழியிலும்வந்துபாடித்திருஞானசம்பந்தமூர்த்தியைத்தரிசித்து அவர்திருக்கலியாணத்திற்சிவலோகஞ்சேர்ந்தார்.

சடையநாயனாசரித்திரம்.

திருநாவலூரில் சிவப்பிராமணர்குலத்திலவதரித்தவர் சடையநாயனார் இவர்பூருவசன்மத்திற் செய்ததவப்பலனால்சுந்தரமூர்த்திசுவாமிகளைப் புத்திரனாகப்பெற்றமையால் சிவலோகஞ்சேர்ந்தார்,





சேரநாயனார்

கோச்செங்கட்சோழர்

திருநாவலூரில் சிவப்பிராமணர் வமிசத்திற்பிறந்தசடையனாரை மணம்புணர்ந்த இசைஞானியார்முற்சனனத்திற் செய்ததவப்பேற்றினால்சுந்தரமூர்த்திகளைப்பிள்ளையாகப்பெற்றுப் பெருமகிழ்ச்சியுற்றுச் சிவபதஞ்சேர்ந்தார்.

## வெள்ளையானைச்சரித்திரம்.

சுந்தரமூர்த்திகள் மலைநாட்டுக்கெழுந்தருளி அவநாசிவழியில்வருகையில் திருப்புக்கொளியூரில் ஒருகிரகத்தில் மங்கலமுமற்றொருகிரகத்தி லழுகையுமுண்டாயிருந்தன அவைகண்டுசுந்தரர்கேட்கப் பிராமணர் வணங்கிச்சுவாமி யென்குழந்தையுமக்கிரகத்துக்குழந்தையு நீராடுகையில் என்குழந்தையைமுதலைவிழுங்கிவிட்டது அதனால் நாங்களழுகிறோம் எங்கள்பிள்ளைக்குச்சரிவயதான அக்கிரகத்துப்பிள்ளைக்கின்றுபநயனஞ்செய்கிறார்களதனால் மங்கலவாத்திய முழங்குகின்றதென்னச்சுந்தரர் அக்குளமெங்கென்று கேட்டுப்பதிகம்பாடி முதலைவாய்ப்பிள்ளையைமீட்டு உபநயனமுடிப்பித்து மலைநாட்டுக்கெழுந்தருளினார்சேரமானெதிர்கொண்டுவந்து பணிந்தார். இருவருந் திருவஞ்சைக்களத்திலிருக்கையில், கைலாயத்திலிருந்து பரமசிவனருத்தரவின்படிசுந்தரமூர்த்திசுவாமிகளுக்குவெள்ளையானையும் சேரமான்பெருமானுக்கு வெண்புரவியுந் தேவர்கள்கொண்டுவந்து இருவரையுமேற்றிக்கைலாயத்திற்சென்றார்கள் இருவருஞ்சுவாமி திருவருள்பெற்றிருந்தார்கள். பார்ப்பதியாருத்தரவினால்பரவைநாச்சியாருஞ்சங்கிலி நாச்சியாரும் கைலையில்வந்துமுன்போலவுமையவளுக்குப்பணிவிடைசெய்திருந்தார்கள்.

## பெரியபுராணம்.

அறுபத்துமூவர்சரித்திரமும்-ஒன்பதுதிருக்கூட்டச்

சரித்திரமும் - முற்றுப்பெற்றன.

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்.

# அட்டவணை.